# தனபிரியா

வழங்கும்

## சேமிப்பு திட்டங்கள்

◆ தனயோக ஃபிக்செட் டெபாசிட் திட்டம் ◆

டெபாசிட்களுக்கு 1 கிராம் தங்க காசு வழங்கப்படும்

### க்யூமுலேடிவ் டெபாசிட்

| வருடம் | டெபாசிட் தொகை | முதிர்வு தொகை | வருடாந்திர வட்டி | ஊக்கத் தொகை |
|---|---|---|---|---|
| 12 மாதங்கள் | 10,000 | 13,000 | 30.00% | 2% |
| 26 மாதங்கள் | 10,000 | 16,000 | 27.69% | 2% |
| 36 மாதங்கள் | 15,000 | 30,000 | 33.33% | 3% |

### ஃபிக்செட் டெபாசிட்

| வருடம் | வட்டி | குறைந்தபட்ச டெபாசிட் தொகை | ஊக்கத் தொகை |
|---|---|---|---|
| 12 மாதங்கள் | 25% | ரூ. 5,000/- | 5% |

### பென்ஷனர் மற்றும் முதியோர்

| வருடம் | வட்டி | குறைந்தபட்ச டெபாசிட் தொகை | ஊக்கத் தொகை |
|---|---|---|---|
| 12 மாதங்கள் | 30% | ரூ. 5,000/- | 2% |

### தனபிரியா பாண்ட்

குறைந்தபட்ச முதலீடு ரூ. 25,000/- இரு மடங்காகிறது. 36 மாதங்களில் ரூ. 50,000/- ஊக்கப் பரிசு : 5 கிராம் தங்க காசு

### தனயோக பாண்ட்

குறைந்தபட்ச முதலீடு ரூ. 50,000/- மும் மடங்காகிறது. 57 மாதங்களில் ரூ.1,50,000/- ஊக்கப் பரிசு : 9 கிராம் தங்க காசு

### திருமகள் திருமண திட்டம் ரிக்கரிங் டெபாசிட் திட்டம்

ரூ.1000 x 25 மாதங்கள் அல்லது
ரூ. 500 x 25 மாதங்கள்

26ம் மாத துவக்கத்தில் ரூ. 50,000/- அல்லது ரூ. 25,000/- பெற்று 27ம் மாதம் முதல் மாதம் ரூ.1000/- அல்லது ரூ.500/- வீதம் 25 மாதத்திற்கு எந்தவிதமான வட்டி இல்லாமல் திரும்ப செலுத்தலாம் அல்லது ரூ. 25,000/-ஐ மறுமுதலீடு 10 வருட காலத்திற்கு செய்து ரூ.2,32,835 பெறுங்கள்

### ஓய்வுதாரர் நலத் திட்டம்

| | |
|---|---|
| குறைந்தபட்ச முதலீடு காலம் வட்டி விகிதம் | ரூ. 1 லட்சம் அல்லது அதற்கு மேல் 6 வருடங்கள் அல்லது அதற்கு மேல் 26 சதவிகிதம் வருடத்திற்கு மற்றும் 1800 சதுர அடியில் வீட்டு மனை திருமுல்லை வாயில் நகரில் இலவசமாக பத்திர பதிவு செய்து வழங்கப்படும் அல்லது ரூ. 15,000/- ரொக்கம் |




**வட்டி தொகைக்கு முன் கூட்டின காசோலைகள் பின் தேதியிட்டு வழங்கப்படும்**

● ஞாயிற்றுக் கிழமையும் அலுவலகம் இயங்கும் ●

## தனபிரியா இன்வெஸ்ட்மென்ட்ஸ் (இந்தியா) லிமிடெட்

*காம்தார் பில்டிங் (2வது மாடி) 143/3. பிராட்வே, சென்னை - 600 108 போன் : 565668*

**கார்பரேட் அலுவலகம் :** எண்.34 துரைசாமி சாலை, தி. நகர், சென்னை -17. போன் : 8281116.

"விரைந்து சேருங்கள் மகிழ்ச்சியாக வாழுங்கள்"

# செஸ் ஆடுறதைவிடக் கஷ்டம் போட்டோவுக்குப் போஸ் குடுக்கறது!



பரபரப்புகளிலிருந்து தாற்காலிகமாகச் சற்று ஒதுங்கி, பெசன்ட் நகர் வீட்டில் ரிலாக்ஸ்டாக இருந்தார் செஸ் ஆனந்த்.

மென்மையாக ஒரு புன்முறுவல். வருடுவது போல் ஒரு "வாங்க". தயக்கமாக "செஸ் பத்திப் பேசணுமா?" "வேண்டாம்" என்றதும் ஒரு ரகசிய, சந்தோஷப் பெருமூச்சு. "வீட்டுல வேண்டாமே? பீச் பக்கம் போயிடலாமா?" என்றதும் உற்சாகமாக ஒப்புக் கொள்கிறார். "ஒரு

நிமிஷம்'' என்று சரேலென்று உள்ளே நழுவி, அம்மாவிடம் சொல்லிவிட்டு வந்து, "ஓகே, ரெடி.''

ஆனந்த் வீட்டிலிருந்து பெசன்ட் நகர் கடற்கரை அடையும் மூன்று நிமிடக் கார் தூரத்திற்குள் காஸ்பரோவ் பற்றி நாலு வரி பேசுகிறார். "பிரமாதமான ப்ளேயர். கொஞ்சம் ரிஸர்வ்ட் டைப். அதிகம் பேச மாட்டார். மறக்க முடியாத மாட்ச் அது!''

வெகு முக்கிய டோர்னமென்ட் என்பதால் நியூயார்க்கை இந்த முறை சுற்றிப் பார்க்க சமயம் கிடைக்கவில்லை என்று வருத்தப்படுகிறார். "அடுத்தவாட்டி போறச்சே ஒரு இடம் விடப் போறதில்லை!''

கடற்கரை மணலில் தலைமுடி பறக்க நடந்தவாறு "ரொம்ப நாளாச்சு, இப்படி ஹாயா இங்க வந்து. நானே இன்னிக்கு பீச்சுக்கு வர்றதாத்தான் இருந்தேன்!''

புகைப்படங்களுக்காக சலிக்காமல் 'போஸ்' கொடுக்கிறார். ஃபோட்டோகிராஃபருக்குக் காதில் விழாத அடிக்குரலில் "செஸ் ஆடறதை விடக் கஷ்டம் - இப்படி 'போஸ்' குடுக்கறது.''

இன்னும் ஒரு மாதத்துக்கு எந்த நிகழ்ச்சியும் இல்லை என்று சந்தோஷமாகச் சொல்கிறார்.

"இந்த வாட்டி ரொம்ப டயர்ட் ஆயிட்டேன். இந்த ஒரு மாச ரெஸ்ட் தேவைதான். ஜனவரியில் ஹாங்காங் போறேன். அங்க ஒரு சீரிஸ். அப்புறம் வரிசையா ஆறு மாசத்துக்கு இருக்கு.''

ஊர் சுற்றிக் கொண்டே இருப்பதால் உள்ளூர் நிலவரங்களை அவ்வளவாகத் தெரிந்து கொள்ள முடியாமல் போகிறதைக் குறிப்பிட்டார். "அங்கங்க நியூஸ் பேப்பர் பார்ப்பேன். டீவியிலா எதுவும் தெரிஞ்சுக்க முடியாது. ரஜினிகாந்த் பாலிடிக்ஸுக்கு வராராமே?''

கல்லூரி நாட்களில் நண்பர்களுடன் சேர்ந்து பார்த்த ரஜினி படங்களை நினைவுகூர்கிறார். "ரீஸன்ட்டா என்னென்ன ரிலீஸ் ஆயிருக்கு? எது பாக்கற மாதிரி இருக்கு?'' என்று தீவிரமாகக் கேட்கிறார்.

நியூயார்க்கிலிருந்து திரும்புகையில் விளையாடுவதற்காக வாங்கி வந்த கம்ப்யூட்டருக்கு கஸ்டம்ஸில் ஏற்பட்ட 'ட்யூட்டி' நெருக்கடி பற்றிக் கேட்டபோது சற்று தயங்குகிறார். "வரி கட்டித்தான் எடுத்துண்டு போகணும்னு சொன்னாங்க. கட்டிட்டேன். அவங்க ட்யூட்டியை அவங்க செய்யறாங்க. We can't blame them. இதெல்லாம் கவர்மென்ட் பார்த்துச் செய்ய வேண்டியது... அஃப்கோர்ஸ், எனக்கு என் ஸ்பான்ஸர்ஸ் (ராம்கோ) இருக்கறதால ஒண்ணும் பிராப்ளம் இல்லை.''

விளையாட்டு வீரர்களுக்கு அரசு இன்னும் பல செய்யலாம் என்பது ஆனந்தின் அபிப்ராயம். ஆனால் வெளிப்படையாகச் சொல்ல ரொம்பவும் தயங்குகிறார்.

## செல்லுலர் திருடர்களும் தொலைபேசி மேதைகளும்!

● செல்லுலர் தொலைபேசி வசதியான, ஆனால் செலவு நிறையப் பிடிக்கும் சேவை என்பதால் ஏமாற்றுக்காரர்கள் இதிலும் நுழைந்திருக்கிறார்கள்– வெளி நாட்டில்.

சுமார் மூவாயிரம் ரூபாய் விலைமதிப்பில் சுலபமாகக் கிடைக்கும் ரேடியோ ஸ்கேனர் என்ற சாதனத்தைப் பயன்படுத்திப் பெருவழிகளிலும், விமானதளம் போன்ற இடங்களிலும் திரிகிற இவர்கள், உபயோகத்தில் இருக்கும் ஏதாவது செல்லுலர் தொலைபேசியின் அடையாள எண், சேவையாளர் எண் போன்றவற்றைக் கிரகித்துக் கொண்டு, அதே தகவல்களோடு, போலியான செல்லுலர் ஃபோன்களை (CLONES) உலவ விட்டுப் பணம் பண்ணுகிறார்கள்.

பத்திரிகைகள் படிக்க, டீவி பார்க்க ஆர்வம் இருந்தும் நேரமில்லை. "ஸ்கூல், காலேஜ் டேஸ்ல, ஃப்ரெண்ட்ஸோட நிறைய அரட்டை அடிப்பேன், சினிமா போவேன். அதெல்லாம் இப்ப சான்ஸே இல்லை.''

உள்ளூரில் இருக்கிற நாட்களில் பள்ளி நண்பர்களைத் தவறாமல் சந்தித்து உரையாடுவதாகச் சொல்கிறார். "கொஞ்ச நேரம் செஸ், டோர்னமென்ட், வெளிநாடுகள் பத்திக் கேப்பாங்க. பொறுமையா சொல்லிடுவேன். அப்புறம் கேஷுவலா ஸ்கூல் டேஸ் நினைவுகளை ஆரம்பிச்சுடுவோம்! ரொம்ப ஜாலியா பொழுது போகும்.''

செஸ் ஆடுவதைப் போலவே ரசித்துச் சாப்பிடுவதிலும் தனக்கு வெகு ஆர்வம் என்கிறார். "மெக்ஸிகன் டிஷஸ்னா ரொம்பப் பிடிக்கும். அப்புறம் சைனீஸ். பகலெல்லாம் கேம் ஆடிட்டு, அலுத்துப் போயி ரூமுக்கு வந்து, விதவிதமா ரசிச்சு சாப்பிடற சுகமே தனி!''

பெரும்பாலான வெளிநாடுகளில்

போலியை வேறு யாரோ பைசா செலவில்லாமல் குஷியாகப் பயன்படுத்திக் கொண்டே இருக்க, உண்மையான சந்தா தாரருக்கு மட்டும் இதயத்துடிப்பும் கிடுகிடு வென்று ஏறும்.

● உலகத்தில் இயங்கும், வரப்போகும் எல்லா செல்லுலர் தொலைபேசிகளையும் செயற்கைக் கோள் மூலம் இணைத்து, சேவையைப் பரவலாக்கவும், சிக்கனமானதாகச் செய்யவும், அமெரிக்காவின் பெரிய கம்ப்யூட்டர் கம்பெனி களில் ஒன்றான மோடரோலா (MOTOROLA) திட்டம் வகுத்துள்ளது.

இரீடியம் செயற்கைக் கோள் அமைப்பு (IRIDIUM SATELLITE SYSTEM) என்ற இந்தப் பிரம்மாண்டமான திட்டப்படி மொத்தம் அறுபத்தாறு செயற்கைக்கோள்கள் அடுத்த இரண்டு ஆண்டுகளுக்கும் வானில் ஏவப்பட்டு, உலகில் எங்கேயிருந்து எங்கே வேண்டு மானாலும் நொடியில் பேச தொடர்பு ஏற் படுத்தித் தரப்படும்.

ஏழாயிரம் கோடி ரூபாய் செலவில் நிறை



வேறப் போகும் இந்த மாபெரும் திட்டத்தின் தலைமை ஏற்றிருப்பது டாக்டர் வேணு வாசுதேவன் என்ற நம்மவர் என்பது, குழந் தைக்குப் பொம்மைத் தொலைபேசி வாங்கிக் கொடுக்கக் கூட மாதாந்திர பட்ஜெட் இடம் கொடுக்காத நம்போன்ற சராசரிகளும், லேசாகக் காலரைத் தூக்கிவிட்டுப் பெருமைப்பட்டுக் கொள்ளக்கூடிய விஷயம்.

-அச்வின்

தமிழ்நாட்டு உணவு வகைகள் கிடைப்பதில்லை என்று வருத்தப்படுகிறார்.

மணல்வெளியில் நடந்து களைத்து, "வீட்டுக்குப் போலாமா?"

திரும்புகையில் சட்டென்று அடையாளம் கண்டு, மடக்கி, "ஆனந்த்!" என்று விழி விரிந்து கைப்பற்றிக் குலுக்கும் சத்யபாமா பொறியியல் கல்லூரி இளைஞருடன் நின்று சிறிது நேரம் பேசுகிறார். அடுத்த சுற்றுப் பயணம் பற்றிச் சொல்கிறார். தோள் தட்டி அவரை வழியனுப்பி விட்டு, "செஸ்ல செக்-மேட் ஆறதே கிடையாது. தோக்கற மாதிரி பொஸிஷன் வந்ததுன்னா, உடனே ரிஸைன் பண்ணிடுவாங்க. ஆனா, லைஃப்ல நான் ஒரே தரம் செக்-மேட் ஆகியிருக்கேன் தெரியுமா?" என்கிறார்.

கேரளா போகிற ரயில் பயணத்தில், சில ஆண்டுகள் முன்பு நடந்த ஒரு அனுபவத்தை உற்சாகமாக விவரிக்கிறார்.

"காலிகட் போயிண்டிருந்தேன். என் எதிரே ஒரு ஆள். என்னைப் பார்த்து, 'ஹலோ' சொல்லி, பேச ஆரம்பிச்சார். சும்மா டைம் பாஸுக்காக. 'என்ன பண்ணிட்டிருக்கீங்க'ன்னு கேட்டார். 'செஸ் ஆடறேன்'. அப்படீன்னேன். 'அது சரி, என்ன பண்ணிட்டிருக்கீங்க'ன்னார். நான் மறுபடி, 'அதான் சார். செஸ் ஆடறேன்'னேன். அவர் ஒத்துக்கலை. 'செஸ் ஆடறது இருக்கட்டும். வேற வேலை என்ன பண்ணறீங்க'ன்னார். 'ஒண்ணும் பண்ணலை. செஸ்தான் ஆடறேன்'னேன். 'போங்க சார். நல்ல வேலை எதாவது பாத்துக்கங்க. செஸ் ஆடறவங்க எல்லாரும் விஸ்வநாதன் ஆனந்த் ஆயிட முடியாது!'ன்னாரே பார்ப்போம்! நான் குளோஸ்! அவருக்கு என் face தெரியலை. ஆனா என்னைப் பத்தி தெரிஞ்சி வெச்சுண்டிருக்கார்! நான் கடைசி வரைக்கும் சொல்லவேயில்லை, நான்தான் ஆனந்துன்னு. ரொம்ப தமாஷா இருந்தது!" அனுபவித்துச் சிரிக்கிறார்.

"கல்யாணம் எப்ப ஆனந்த்?" என்று கேட்டதும் முகம் சிவந்து வெட்கம் வந்து விடுகிறது. "வயசு என்ன... இருவத்தேழா?" என்றதும் முறைக்கிறார். "ரெண்டு கூட்டிச் சொல்றீங்களே!"

வீட்டில் பார்த்துக் கொண்டிருப்பதாகச் சொல்கிறார். மனைவி பற்றிச் சில எதிர்பார்ப்புகள் வைத்திருப்பது கண்களில் தெரிகிறது. ஆனால், சாமர்த்தியமாகச் சொல்ல மறுக்கிறார். நைஸாக வேறு டிராக்கில் நழுவுகிறார்.

உலகப்புகழ், கிராண்ட் மாஸ்டர் பட்டம், வி.ஐ.பி. அந்தஸ்து, ரசிகர் பட்டாளம் அனைத்தையும் தாண்டிய நிஜ ஆனந்த்!

- ஔரங்கசீப்

வண்ணப் படம் : யோகா

# இதோ, ஒரு கடிகாரக் குடும்பம்!

• ஜெயந்திராம்

• 18-19 வயதில் ஏராளமானோர்...

என்முனையில் பாதி அளவுக்கு, பொன்நிறத்தில் ஒரு திருகாணி! 'டுவீஜர்' கருவியைப் பயன்படுத்தி ஒவ்வொரு ஆணியாக எடுத்துப் பொருத்த வேண்டும். ஒரு சின்ன வட்டத் தகட்டுக்குள், ஒரு பொன்நிற என்முனைப்பாதி உட்கார்ந்தால், ஒரு கைக்கடிகாரத்தின் ஒரு பாகத்தைப் பொருத்தியவராவீர்கள்!

நூற்றுக்கணக்கான பாகங்கள்; ஆயிரக்கணக்கான கடிகாரங்கள். அலுக்காமல் சலிக்காமல் ஒரு தான கதியுடன் பொருத்துகிறது பெண்கள் படை.

• மோதிர மரம்!

• நாகஜோதியுடன் கவிதா

'பொறுமையெனும் நகையுடன்', தலையில் தொப்பி, விரல்களில் ரப்பர் உறைகள், தாவணியை மறைக்கும் வெள்ளை கோட் ஆகியனவும் அணிந்த பெண்கள்!

''மிஷின் மாதிரி இப்படி ஒரே வேலையைச் செய்யறீங்களே...? சலிப்பாக இல்லையா?'' - கேட்டால் நம்மை ஏதோ விண்வெளி ஜந்து போல் வியப்புடன் பார்க்கிறார் நாகஜோதி.

''எப்படி சலிப்பு வரும்?... சில மணி நேரங்களுக்கு ஒருமுறை கை வேலையை மாற்றிக் குடுப்பாங்க... தவிர, இந்தச் சின்ன வேலை ஒவ்வொண்ணும் சரியா நடந்தாத்தானே எங்க கடிகாரம் சிரா ஓடும்...'' நாகஜோதி நிமிர்ந்து பேசுகிறார்.

'எங்க கடிகாரம்' என்று அவர் உரிமை கொண்டாடுவது டைடன் நிறுவனத் தயாரிப்புகளை.

• ஹரிராவ்

**வ**டாற்காடு மாவட்டம், திருப்பத்தூரைச் சேர்ந்த நாகஜோதி, ஓசூர் டைடன் தொழிற்சாலைக்குப் பணிபுரிய வந்தது எப்படி...?

பிளஸ் டூ முடிக்கவிருந்த நேரத்தில் டைடன்காரர்கள் பள்ளிக்கே வந்தார்கள். பேட்டி கண்டார்கள்.

''ஜாதி? மதம்? குலம்?ன்னு அனாவசிய கேள்வியெல்லாம் கேட்கவேயில்லை. நான் பேசியது அவங்களுக்குப் பிடிச்சது போலிருக்கு... வேலை தரேன்னு சொன்னாங்க... வருமானம் இல்லாம தவிச்சுக்கிட்டிருந்தது எங்க விவசாயக் குடும்பம். என்னைத் தவிர இரண்டு பொண்ணுங்க அப்பா அம்மாவுக்கு. குடும்

• தேசாய்

பத்தைக் காப்பாத்த வேண்டாமா...? கிளம்பி வந்துட்டேன்..."

"எப்படி ஊர் விட்டு ஊர் அனுப்பினாங்க?"

"இவங்கதான் தங்கறதுக்கு லேடீஸ் ஹாஸ்டல்ல இடம் கொடுத்து, ஃபாக்டரியிலயே இரண்டு வேளைச் சாப்பாடும் போடறாங்களே... அப்புறம் நைட் சாப்பாடு ஹாஸ்டல்ல குறைஞ்ச விலைல கிடைக்குது... இப்ப என் குடும்பத்தையே ஹோசூருக்கு அழைத்து வந்துட்டேன். வீடு பார்த்துக்கிட்டோம்; தங்கையைப் படிக்க வைக்கிறேன். நானும் இந்திரா காந்தி ஓபன் யூனிவர்சிடியில பி.ஏ. படிக்கறேன். ...வேறென்ன வேணும் ஒரு பொண்ணுக்கு..."

'வேறென்ன வேணுமானாலும்' கவனித்து உதவத்தான் டைடன் நிறுவனம் கவிதாவை நியமித்திருக்கிறது. சமூக சேவையில் பெற்ற முதுகலைப் பட்டத்தின் புதுமணம் மாறும் முன்னரே இந்த நிறுவனத்தால் ஆலோசகராக (counsellor) நியமிக்கப் பெற்றவர்.

இங்கே பணியாற்றும் ஊழியர்களுள் 18-19 வயதினர் ஏராளம்! இந்த வயதுக்கே உரிய பிரச்னைகள், மனக் கூம்பல்கள், வீட்டைப் பிரிந்து வந்ததும் புது சுதந்திரம் தரும் போதை, இருபாலரும் இணைந்து உழைப்பதால் தோன்றும் காதல் மற்றும் காதலின் 'இமிடேஷன்' ஏமாற்றங்கள்... இப்படி பல்வேறு வலைகளில் இவர்கள் சிக்கிக் கொள்வதும் சகஜம்.

இந்த நேரங்களிலெல்லாம் மென்மையாகச் சிரித்துக் கொண்டே சிடுக்கெடுத்து விடுவிக்க உதவுபவர்தான் ஆலோசகர் கவிதா.

கவிதாவின் உதவிக்கரம் ஊழியர்களின் குடும்பத்தினருக்கும் கூட நீள்கிறது. "எங்கள் ஊழியை ஒருத்தியின் அக்காவுக்கு மனச் சிதைவு (schizoprenia) நோய் இருந்தது. அவர்கள் குடும்பத்தினரால் அதை அடையாளம் காணவே முடியவில்லை. ஆனால், அக்காவின் நடத்தையினால் தங்கை கவலைக்குள்ளாக, அவள் வேலையும் பாதிக்கப்பட்டது. விசாரித்த போது பிரச்னை தெரியவர, சிறந்த மனநல மருத்துவரின் ஆலோசனைக்கும் சிகிச்சைக்கும் ஏற்பாடு செய்தேன். நோயாளி குணமடைந்து வருகிறார். அவரது தங்கையும் பழையபடி பணியில் கவனம் செலுத்துகிறார்..." என்கிறார் கவிதா.

இன்று டைடன்தான் இந்தியாவின் மிகப் பெரிய வாட்ச் நிறுவனம்.

சராசரிகளுக்கான கடிகாரங்கள் தவிர, பழுத்த பணக்காரர்களுக்கென்றே jewelled watches என்றொரு ரகம் உற்பத்தி செய்கிறார்

## 'சுருக் நறுக்'கென்று ஒரு சொல்லோவியம் - 11

### மெகா பரிசாக ஒரு ஜோடி கடிகாரங்கள்!

அட்டையில் சந்தானலட்சுமி அணிந்துள்ள இரு கைக்கடிகாரங்களைப் பார்த்தீர்களா..? டைடன் நிறுவனம் கல்கி வாசகர்களுக்காகக் கொடுத்துள்ள அந்த ஜோடிதான் சுருக் நறுக் போட்டிக்கான மெகா பரிசு! ஒன்பதாயிரம் ரூபாய் பெறுமானமுள்ள ஒளிவீசும் ஜோடி!

பத்து வாரங்களாகப் போட்டிகளில் பங்கேற்று பிய்த்து உதறிக்கொண்டிருக்கும் வாசகர்களே! தொடர்ந்து முயன்று மெகா பரிசுக்குக் குறி வையுங்கள்!

### இந்த வாரப் போட்டி...

## நேரம் என்பது....

**எத்தனையோ விதங்களில் நேரத்தை விவரிக்கலாம்! உங்கள் விளக்கத்தைக் கீழேயுள்ள கூப்பனில் எழுதி, விவரங்கள் பூர்த்தி செய்து 2.1.96க்கு முன்னதாகக் கிடைக்கும்படி அனுப்புங்கள்.**

**பிரசுரமாகும் ஒவ்வொரு சொல்லோவியமும் ஐம்பது ரூபாய் பரிசு பெறும். தவிர, 26 வாரப் போட்டிகளில் அதிக முறை தமது விளக்கங்கள் பிரசுரிக்கப் பெறும் ஒருவர் அட்டையிலுள்ள ஒரு ஜோடி கைக்கடிகாரங்களைப் பெறுவார்! (ஆசிரியர் தீர்ப்பே இறுதி)**

**முந்திக் கொண்டு எழுதுங்கள் பார்க்கலாம்!**

நேரம் என்பது ..................................................

..................................................

..................................................

..................................................

..................................................

பெயர் : ..................................................

முகவரி :. ..................................................

..................................................

..................................................

கள். வைரங்களும் பச்சை, சிவப்புக் கற்களும் இழைத்த தங்கக் கடிகாரங்கள்! 'டனிஷ்க்' என்ற பெயருடையது இந்த ரகம்.

ஐரோப்பிய நாடுகளுக்கென யூரோ மாடல் கைக் கடிகாரங்கள், மேஜை கடிகாரங்கள் உற்பத்தியும் தொடங்கப்பட்டுள்ளது.

கடிகாரங்களை உருவாக்கத் தேவைப்படும் சில பிரத்யேகமான கருவிகளையும் இவர்களது machine tool பிரிவு தயாரிக்கிறது.

சமீபத்திய டைடன் முயற்சி, தங்க நகைகள் (18 காரட்) உற்பத்தி. இதுவும் ஏற்றுமதி மார்க்கெட்டை மனத்தில் கொண்டுதான் என்றாலும் இந்தியாவிலும் சிறப்பாக விற்பனையாகும் என எதிர்பார்க்கிறார்கள்.

விரிவாக்கங்கள் எல்லாமே திட்டமிட்ட நடவடிக்கைகளாக இருந்து வருவதால் நிறுவனத்தின் டர்ன் ஓவர் 284 கோடி ரூபாயிலிருந்து அடுத்த நிதி ஆண்டே 500 கோடி ரூபாயாக உயரும் என்று எதிர்பார்க்கிறார்கள். ஐந்தே ஆண்டுகளில் அது ஆயிரம் கோடியை எட்டும் என்பதும் கணிப்பு. ஒரு டாடா நிறுவனத்துக்கே உரிய தீர்க்கதரிசனம் இதற்கு நிச்சயம் வழிசெய்யும்.

கடிகாரங்கள் டிசைன் செய்யும் பிரிவில், கம்ப்யூட்டர் இளைஞர்கள் மண்டையை உடைத்துக் கொண்டு வரைபடம் தயாரிக்கிறார்கள். சாம்பிள் மாடல்கள் உருவாக்கப்பட்டு மார்க்கெட்டில் வெள்ளோட்டம் விடப்படுகின்றன. அவை பெறும் வரவேற்பைப் பொறுத்து உற்பத்தி பிரிவு பணியை மேற்கொள்கிறது.

உற்பத்தி அதிநவீன முறையில் "பிளஸ் டூ முடித்ததும் இங்கே பயிற்சியாளனாகச் சேர்ந்தேன். இவங்களே ஃப்ரான்ஸுக்கும் சுவிட்சர்லாந்துக்கும் அனுப்பினாங்க. அங்கே சிறப்புப் பயிற்சி பெற்றுத் திரும்பினேன். மூணே வருஷத்துல இஞ்சினியரா பிரமோஷன் ஆகியிருக்கு..." என்று பூரிக்கிறார் machine tool பிரிவில் சாதிக் பாஷா.

ஸ்ட்ராப்புகள் பொருத்தும் பிரிவில் முழுக்க முழுக்க ஊனமுற்றவர்களே பணியாற்றுகிறார்கள். தங்கள் பணியை சைகஜாடைகளால் நமக்கு விளக்கி நெகிழ்த்துகிறார்கள்.

ஐரோப்பிய மாடல்களுக்கான Euro Plant குறித்து டைடன் ஊழியர்கள் அத்தனை பேரும் பெருமைப்படுகிறார்கள். இங்கு தயாராகும் கடிகாரங்களின் கனபரிமாணம் 4.2 மில்லி மீட்டர்தான் இருக்க வேண்டும். (வழக்கமான பரிமாணம் 5.5 மி.மீ) ஸ்ட்ராப்புகளுக்கு உபயோகிக்கும் ஸ்டெயின்லெஸ் ஸ்டீலில் நிக்கல் சேர்க்கை மிகத் துல்லியமான அளவில் இருக்க வேண்டும்; உலோக ஸ்ட்ராப்பாக இருந்தாலும் விடைத்துக் கொண்டு நிற்காமல், மணிக்கட்

டைப் பட்டுப் போல் தழுவ வேண்டும்.

இவ்வளவு சவால்களையும் சமாளிப்பவர்கள் இளைஞர்கள், இளைஞர்கள் மேலும் இளைஞர்கள்!

**ந**கைகள் உற்பத்திப் பிரிவிலும் இளைஞர்களே! இந்தியா முழுவதிலுமிருந்து தேர்ந்தெடுத்த கைவினைஞர் குடும்பங்களிலிருந்து இளைஞர்களையும் பெண்களையும் பணிக்கு அமர்த்தியுள்ளார்கள்.

ஹட்டி தங்கச் சுரங்கத்தின் மொத்த உற்பத்தியையும் வாங்கிக் கொள்கிறது டைடன். வந்து சேரும் தங்கம் முதலில் 99.99 சவிகிதம் தூய்மைப்படுத்தப்படுகிறது. (சுவிஸ் தொழில் நுட்பம்)

தூய தங்கத் தகடுகளை டனிஷ்க் கடிகார ஸ்ட்ராப்புகளுக்கும் நகைகளுக்குமாகப் பயன்படுத்திக் கொள்கிறார்கள்.

நகைகள் தயாரிப்பு முறை புதுமையானது. ஒரு மாடலை வெள்ளியில் தயாரித்து, அதை ரப்பரில் பதிவு செய்கிறார்கள். ரப்பர் பதிவில் மெழுகு செலுத்தி, மெழுகு மாடலைப் பெறுகிறார்கள். நூறு மோதிரங்கள் தேவை எனில் நூறு மெழுகு மாடல்கள் தயாரித்துக் கொள்கிறார்கள். அவற்றை மரத்தின் கிளை போல் அடுக்கி, பிளாஸ்டர் ஆஃப் பாரிஸில் வார்த்து, பின்னர் மெழுகை உருக்கி வெளியேற்றி விடுகிறார்கள்.

மெழுகுக்குப் பதில், உருக்கிய தங்கத்தை, பிளாஸ்டர் ஆஃப் பாரிஸ் வார்ப்பில் ஊற்ற, தங்க மோதிரக் கிளைகளுடன் ஒரு 'மினி' மரம்! மரக் கிளைகளை வெட்டி எடுத்து, ராவி, கல் பதித்து... ஒரே மாதிரி நூறு என்ன.. ஆயிரம் மோதிரங்கள் கூட செய்யலாம்!

**த**ங்கமும் வைரமும் முத்தும் பவழமும் சேர்ந்து மயங்கடிக்கும் நகை தொழிற்சாலையிலிருந்து வெளிப்பட்டு டைடன் உற்பத்திப் பிரிவின் வைஸ் பிரெசிடண்ட் ஹரி ராவைச் சந்திக்கிறோம்.

"காஞ்சியின் புடைவைகளையும் தஞ்சையின் கோயில்களையும் உருவாக்கிய கலைக் குடும்பப் பாரம்பரியம்தான் எங்கள் தயாரிப்புகளுக்கு அழகும் மெருகும் சேர்க்கின்றன..." என்கிறார் அவர்.

"தொழிற்சாலை தொடங்கிய போது நூற்றில் ஒரு கடிகாரம் நிராகரிப்புக்கு உள்ளாயிற்று. இப்போது ஆயிரத்தில் ஒன்றுக்கும் குறைவாக இருக்கிறது நிராகரிப்பு விகிதம். கச்சிதமே எங்கள் இலக்கு..."

– சொன்னவரின் அருகே சுமார் இருபத்தைந்து வயது இளைஞர்.

"இவர் எங்கள் எதிர்காலத்தைத் திட்டமிட்டுக் கொண்டிருக்கிறார்" என்கிறார் ஹரி ராவ்



ஆசிரியர் : இந்தியாவின் 'வீரப் பெண்மணி' யார்?

மாணவன் : 'விஜயசாந்தி' சார்.

- சதீஸ்குமார்

அந்த இளைஞரைச் சுட்டிக்காட்டி... "இருபத்தோராம் நூற்றாண்டுக்கு டைடனைத் தயார் செய்வது இவர் போன்றவர்களின் பொறுப்பு" என்கிறார்.

**நி**ர்வாக இயக்குனர் தேசாயைக் காண நம்மை அழைத்துப் போகிறார் பொதுத் தொடர்பு அதிகாரி ஜெயந்தி ராம். அமைதியாகப் பேசினாலும் அவரது உற்சாகமே டைடனுடைய சகல வெற்றிகளுக்கும் ஊற்றுக் கண் என்பது புரிகிறது.

"இந்த ஹொசூர் ஹைடெக் நகரமாக மாற வேண்டும். உலகளாவிய தொடர்புகளுடன் ஓர் அதிநவீன தொழில்கேந்திரமாக அதனை உருமாற்ற டைடன் முன்நின்று உதவும்... எங்கள் நிறுவனத்தைச் சுற்றிப் பார்க்கும் அயல் நாட்டவர் கூட டைடன் கலாசாரத்தைக் கண்டு ஆச்சரியப்படுகிறார்கள். ஆனால் இங்கு நிலவுவது அப்படியொன்றும் அரிய சூழ்நிலை என்று சொல்ல மாட்டேன். இந்தியாவின் எந்தப் பகுதியிலும் எந்த நிறுவனமும் அடையக்கூடியதுதான் டைடன் கலாசாரம்...." என்கிறார்.

**'டை**டன் கலாசாரம்...' அதை எப்படி வாசகர்களுக்கு விளக்குவது...? யோசித்தபடி அந்த ஃபாக்டரி யாத்திரையின் முடிவை நெருங்க...

தேவலோகம் போல் நீரூற்றுகளும் செடி கொடிகளும் பசும்புல்தரையும் தழுவ நின்ற டைடன் வளாகத்தின் துப்புரவான நடைபாதையில்... ஒரு சின்ன கசங்கிய காகிதத் துண்டு.

அதைக் காணச் சகியாமல் சட்டென்று பொறுக்கி எடுத்து பாக்கெட்டில் போட்டுக் கொள்கிறார் நம்முடன் வரும் Customer Assurance Officer ஜெயராம். 'பளிச்'சென்று நமக்கு உரைக்கிறது... இதுதான் டைடன் கலாசாரம்!

**- சீதா ரவி**

அட்டை வண்ணப்படம், படங்கள் : **யோகா**



பங்கு மார்க்கெட்
*1950*



பங்கு மார்க்கெட்
*1970*



பங்கு மார்க்கெட்
*1990*




**நெடுங்காலமாக முன்கூட்டியே**
**உறுதியாகக் கூறப்படுவது**
**ஒன்றே ஒன்று – ITI.**

**ICRA RATING**
**MAA+**
**HIGH SAFETY**

- பிக்செட் டெபாசிட்டுகள் • ஹயர் பர்ச்சேஸ்
- லீசிங் • மர்ச்செண்ட் பாங்கிங்
- மியூச்சுவல் ஃபண்டுகள் • நிதியுதவி சேவைகள்.

நிதியுதவி சேவைத் துறையில் ஒவ்வொரு நிமிடமும் ஏதாவது மாறுதல் ஏற்பட்டுக்கொண்டே இருக்கிறது. அப்படியெனில் கடந்த 50 ஆண்டுகளில் எத்தனை மாறுதல்கள் ஏற்பட்டிருக்கும் என்று எண்ணிப் பாருங்கள். ஆனால் கூர்ந்து கவனித்தால், ஒரு சில முக்கியமான விஷயங்கள் இன்னும் மாறவே இல்லை.

எடுத்துக்காட்டாக, இன்வெஸ்ட்மென்ட் டிரஸ்ட் ஆஃப் இந்தியாவில் (ITI) தழைத்தோங்கி இருக்கும் திடநம்பிக்கை மற்றும் சேவைமிக்க பாரம்பரியம். கடந்த 50 ஆண்டுகளாக எங்கள் மதிப்பு மிக்க நிறுவனர் திரு. C.M. கோத்தாரி அவர்களின் முன்னோக்குக் கொள்கைகளால் எங்களது வணிகத்தின் ஒவ்வொரு அம்சமும் செயலூக்கம் பெற்றுள்ளது. ஒரு நிதி நிறுவனம் நீண்ட காலத்துக்கு தழைத்தோங்கி இருக்க ஒரு மதிப்புயர்ந்த சொத்து என்னவெனில், அதன் வாடிக்கையாளர்களின் திட நம்பிக்கைதான் என்பதை அவர் உறுதிபடக் கடைப்பிடித்து வந்தார். வாடிக்கையாளர்களுக்கு செய்யப்படும் சேவைய்ய ஆழ்ந்த பொறுப்புடன் செய்வதுதான் வெற்றிக்கு வழி என நம்பினார்.

**ITI– *50 ஆண்டு திட நம்பிக்கை மற்றும் சிறந்த சேவை***

இந்த ஆண்டு ITI, திட நம்பிக்கை மற்றும் சிறந்த சேவை செய்யும் பாரம்பரியத்தின் பொன்விழாவைக் கொண்டாடுகிறது. லீசிங், பிக்செட் டெபாசிட்டுகள், மர்ச்சென்ட் பாங்கிங், மியூச்சுவல் ஃபண்டுகள், ஹயர் பர்ச்சேஸ் மற்றும் நிதியுதவி சேவைகள் உள்பட எல்லா துறைகளிலும் நாங்கள் ஒரேசீரான வளர்ச்சியையும் சாதனைகளையும் குறிக்கும் பொன்னான 50 ஆண்டுகளைக் கொண்டாடுகிறோம். இந்த ஆண்டு ITI, நம்பகமான செயல்பாட்டைக் குறிக்கும் 50 ஆண்டுகளைப் பொன்விழாவாகக் கொண்டாடுகிறது.




**தி இன்வெஸ்ட்மென்ட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா லிட்.**

*(ஒரு H.C.கோத்தாரி குரூப் நிறுவனம்)*

"மஷ்கூர் பில்டிங்ஸ்", 1 கிருஷ்ணமாச்சாரி சாலை, நுங்கம்பாக்கம், சென்னை 600 034.
தொ.பே : 8276297, 8274871, 8274885, 8271691, 8255682.

கி. ராஜேந்திரன்

கோட்டை நகரில் (பிராங்க்ஃபார்ட்) ஹோட்டல் அறையை அடைந்ததும் முதல் காரியமாக சென்னைக்கு ஃபோன் போட்டான், இன்பா. 'இப்போது அங்கே மாலை நேரமாயிருக்கும். அப்பா ஒரு வேளை கிளப்புக்குப் போயிருந்தாலும் சின்னி வீட்டில் தான் இருப்பான்.'

"ஹலோ!"

"சின்னி! அப்பா பேசறேன்."

சின்னிக்கு உடம்பெல்லாம் சிலிர்த்தது. "ஹாய் அப்பா! எப்படி இருக்கே? எங்கேருந்து பேசறே?"

"பிராங்க்ஃபர்ட். டேய் சின்னி! ஒரு குட் நியூஸ். அம்மாவைக் கண்டு பிடிச்சுட்டேன்! இங்கதான் இருக்கா!"

"என்னது? பிராங்க்ஃபர்டிலேயா!"

"ஆமாண்டா! ஆச்சர்யமாயில்லே! அதிகமா போனா இன்னும் ஒரு வாரத்துல திரும்பி வந்துடுவேன், அம்மாவையும் அழைச்சுக்கிட்டு. தாத்தா சௌக்கியமா! நீ எப்படி இருக்கே?"

"எல்லாரும் சௌக்கியம்தான். அம்மாவை பேசச் சொல்லேன். அங்கே எப்படி அவ...?"

"அம்மா தற்சமயம் என்னோட இல்லே. அவளைப் பார்க்கத்தான் கிளம்பிக்கிட்டிருக்கேன். எல்லா கதையும் திரும்பி வந்து விவரமா சொல்றேன். அப்பா இருக்காறா?"

"உம்... அப்பா, ரஸியா, அனு ஆண்டி எல்லாரும் இருக்காங்க. அனு ஆண்டி அமெரிக்கா போறாங்களாம். சொல்லிக்கிட்டுப் போகத்தான் வந்திருக்காங்க."

"என்னது! அமெரிக்காவா?"

"ஆமா, இதோ ஆண்டியே பேசறா" என்று ரிஸீவரைக் கொடுத்தான்.

தொண்டை அடைப்பது போலிருந்தது. குழந்தைகள் இரண்டுபேர் முன் கண் கலங்க விரும்பாமல் சிரமப்பட்டு தன்னை கட்டுப் படுத்திக் கொண்டு விவரம் சொன்னாள்.

"கங்கிராட்ஸ்! அருமையான, வாய்ப்பு அனு" என்றான். "நீ புறப்படறதுக்கு முன்னாடி நான் வந்துடுவேன். நேரில் பேசலாம்."

"சரி... உங்களையெல்லாம் பிரியணுமேன்னு தான்..."

"அனு! உன்னை நினைச்சு நான் ரொம்பப் பெருமைப்படறேன். விஞ்ஞான ரீதியா நீ சாதிக்கப் போறது எவ்வளவோ இருக்குன்னு தெரியுது. உன் மனசை விசாலப்படுத்திக்க. சின்னச் சின்ன ஏமாற்றங்களைப் பொருட் படுத்தாதே. பெரிய லட்சியங்கள் உனக்காகக் காத்திருக்கு!"

அப்பாவிடம் பேசினான். சாயா பற்றி சந்தோஷமாய்ச் சொன்னான். அப்புறம் ரஸியாவிடம்: "சின்னி உன்னை ஜாக்கிரதையா கவனிச்சுக்கறானா அல்லது நீதான் சின்னியைப் பார்த்துக்கறியா?"

"ரெண்டும்தான், அங்கிள்" என்றாள். "சின்னி ரொம்ப நல்லா படிக்கிறான். டபுள் பிரமோஷன் கிடைச்சாலும் ஆச்சர்யமில்லே!"

"தாங்க்ஸ், ரஸியா. உன்னோட பாதிப்புத் தான் காரணம். வைக்கட்டா? ஸீ யூ!"

ரஸியா ஃபோனை வைத்து விட்டுத் திரும்பவும், உற்சாகம் தாங்காமல் சின்னி அவளுடைய இரண்டு கன்னக் கதுப்புக்களையும் கிள்ளி எடுத்துத் தன் விரல்களை முத்தமிட்டுக் கொண்டான். "என் அம்மா கிடைச்சுட்டாங்க! கிடைச்சுட்டாங்க!" என்று சோபா மேல் ஏறி கூத்தாடி அதை துவம்சம் செய்தான்.

"ராத்திரி நம்ம எல்லாருக்குமே வடை பாயசத்தோட சாப்பாடு" என்று அனு சமையலறைக்குள் புகுந்தாள்.

"இன்னிக்கு இனிமே பாடம் படிக்கிறது மகா பாவம்! டீவி பார்க்கலாம்; இல்லே, கேரம் விளையாடலாம்" என்றான் சின்னி.

"சின்னீ ஈஈஈ"என்று ரஸியா நீட்டலாக அழைத்தாள், எச்சரிப்பதுபோல்.

பரம சாதுவாக புத்தகம் பிரித்தான்.

பான் நகரம் ஜெர்மனியின் புதுதில்லி. பிராங்க்ஃபர்ட் ஜெர்மனியின் மும்பாய். திரும்பின பக்கமெல்லாம் அதி நவீன வடிவங்களில் வங்கிக் கட்டடங்கள் விண்ணளாவி, ஜெர்மனிய மார்க்கின் ஸ்திரத்தன்மையையும் உயர் மதிப்பையும் பறை சாற்றின. இந்தத் தொழில் வர்த்தகக் கேந்திரத்தில் ஒவ்வொரு

21



டூரிஸ்ட்டின் கவனத்தையும் ஈர்த்து, அண்ணாந்து பார்க்கச் செய்தது உயர மான, கனத்த தூண் வடிவத்தின் உச்சியில் குடை விரித்தாற்போலிருந்த 'ரிவால்விங் ரெஸ்டாரண்ட்.' இந்தச் சுழலும் உணவு விடுதியை ஜெர் மானியர் மிகவும் விரும்பி அருந்தும் பீர் தயாரிக்கும் நிறுவனம் ஒன்று அமைத்திருந்தது. ஒரு மேஜை கிடைத்து அமர்ந்து விட்டால், சாப்பிட்டு முடிப்பதற்குள் உணவு விடுதியே இரண்டு மூன்று முறை மெல்லச் சுழன்று வந்து, பிராங்க் ஃபர்ட்டை பறவைக் கண்ணோட்டத்தில் சுற்றிப் பார்க்கச் செய்து விடும். உணவை ரசிக்க முடியாது என்று தெரிந்திருந்த போதிலும் அந்த உல்லாச உயரத்தை ரசிப்பதற்காக சாயா லிஃப்ட் ஏறி வந்து அமர்ந்தாள். ரொட்டியுடன் வெஜிடபிள் சூப் கொண்டு வரச் சொல்லி விட்டு கண்ணாடி ஜன்னல்களினூடே வெளியே பார்வையைச் செலுத்தினாள்.

"சாயா!"

திடுக்கிட்டுத் திரும்பினாள்.

இன்பா! அவள் இதயம் நழுவி வயிற்றுக்கு இறங்கி விட்டது போலிருந்தது. அவன் முகத்தில்... அது கடுமையா? கருணையா?

மெல்ல எழுந்து, குற்றம் செய்துவிட்ட சிறுமி டீச்சரைக் கண்டு நடுங்குவது போல் நின்று, "என்னைக் கைது செய்யத்தானே வந்திருக்கிறீர்கள்?"





## அருள்வாக்கு

ஜாதியில் உயர்வு–தாழ்வு நிச்சயமாக இல்லை. எவனொருவனும் தான் இன்னொருவனைக் காட்டிலும் உசந்தவன் என்று நினைக்கிறதே பாபம் என்று சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறது. மஹான்களும் இப்படித் தான் நமக்கு வழிகாட்டியிருக்கிறார்கள். ''நாயினும் கடையேன்'' ''நாயடியேன்'' என்றெல்லாந்தான் அவர்கள் தங்களைச் சொல்லிக் கொள்கிறார்கள். இந்த மனப்பான்மை சுதந்திர யுகத்தில் போய் விட்டதுதான் கோளாறு. பழைய அடக்க மனோபாவம் நமக்கு வர வேண்டும். வந்து விட்டால் காரியத்தில் ஜாதி இருக்குமே தவிர, மனஸில்

என்றாள் கண் கலங்க.

"ஆமாம்; சிறைப்படுத்தத்தான், என் கரங்களுக்கிடையில்"என்று கைகளை அகல நீட்டி புன்னகைத்தான். தென்பிழந்திருந்த கால்களை எப்படியோ இயக்கி, இரண்டடி எடுத்து வைத்து, அவன் மீது உடல்பளு முழுவதையும் இறக்கினாள். அவன் அணைக்கவும் ஓசை அடக்கி விம்மினாள்.

சுற்றிலும் உணவு மேஜைகளை ஆக்கிரமித்திருந்த டூரிஸ்டுகள் இந்த நிஜ நாடகக் காட்சியை வெகுவாக ரசித்துக் கை தட்டினார்கள். "கோ ஆன், கிஸ் ஹர்!" என்று தூண்டினார் அமெரிக்கர் ஒருவர், உரத்த குரலில்.

"யா, யா" என்று வேறு பலர் ஆமோதித்தனர்.

இன்பா அவள் சிரம் வருடி மெல்லத் தலையை உயர்த்திக் கன்னத்தில் முத்தமிட்டான்.

'ஓ'என்று ஏமாற்றத்தொனிகள் நாலாபுறமிருந்தும் எழுந்தன. "கோ ஆன், கிஸ் ஹர் நைஸ்லி!"

அவள் முகவாயை உயர்த்தி அதரங்களில் தன் உதடுகளை ஒற்றி எடுத்தான். சந்தோஷ ஆரவாரம் கிளம்ப, குளிரில் ஏற்கெனவே சிவந்துவிட்டிருந்த சாயாவின் கன்னங்கள் மேலும் கனிந்தன.

அமர்ந்தார்கள். ஒருவர் கையை ஒருவர் விடாமலே இருந்தார்கள்.

''என் முட்டாள்தனத்துக்கு மன்னிப்பு உண்டா?''என்று கேட்டான். ''உங்களிடம் கோபித்துக் கொண்டு ஒரு பிசாசிடம் சிக்கிக் கொண்டேன்!''

"இப்போது புரிகிறதா உனக்கு? அனுபமா பற்றி கலகம் செய்து மொட்டைக் கடிதாக எழுதியது இந்த சூர்யா சுவாமிதான். பென்ஜமின் உருவில் சென்னையில் வளைய வந்திருக்கிறான். போட்டோக்களும் அனுப்பியிருந்தானில்லையா?''

"ஆமாம்; அவையெல்லாம் பொய்தானே?"

"முழுப்பொய்"என்று சுருக்கமாக ரவியா பற்றியும், அனுபமா குறித்தும் விளக்கினான். "அப்பா சொன்னார், இதையெல்லாம் நான் உன்னிடம் மனசு விட்டு பேசியிருக்கணும்னு. அப்படி செய்திருந்தா இந்த விபரீதமெல்லாம் நடந்திருக்காது."

"சதா வேலை வேலைன்னு பெண்டாட்டியிடம் பேசக் கூட உங்களுக்கு நேரம் இருப்பதில்லை."

"அது மட்டும் காரணமில்லே சாயா. நான் ரகசிய பிரமாணம் எடுத்தவன். உத்யோக ரீதியான விஷயங்களை அவற்றுடன் தொடர்பில்லாதவர்களுடன் பேசக் கூடாது என்று கற்று, அப்படியே பழகியவன்."

''நடந்தது நடந்து போச்சு. இப்ப இந்த மாஃபியா கும்பல்லேர்ந்து காப்பாத்தி என்னை முதல் ஃப்ளைட்ல சென்னைக்கு அழைச்சுப் போயிருங்க. முடியுமானா இன்னிக்கே இப்பவே பறந்துடுவோம்."

''அது அவ்வளவு சுலபமில்லே, சாயா. குருஜியின் ஆட்கள்– பென்ஜமின் தவிர வேறு சிலரும் உன்னை கண்காணிச்சுக்கிட்டு இருப்பாங்க. தப்பி ஓடறதா தெரிஞ்சா கொலை விழும். நிச்சயம். இது மில்லியன் டாலர் வியாபாரம். மனித உயிர்கள் துச்சம்.''

அவனுக்கும் தெரிந்தே இருந்தது. சூர்யா சுவாமியின் டெலிஃபோன் எச்சரிக்கைகள் காதுகளில் ஒலித்தன.

"முதலில் சாப்பிட்டு முடி. இங்கேயிருந்து ஐம்பது அறுபது கிலோமீட்டர் தூரத்தில் ரைன் நதியும் மைன் நதியும் இணைகிற இடம் ஒன்றிருக்கு. குன்றின் மேலிருந்து பார்க்க அற்புதமாய் இருக்குமாம். அங்கே போய்ப் பேசலாம்."

உப்புச்சப்பற்ற உணவுகூட ருசித்தது சாயாவுக்கு. கவலைகள் கனவாயின. கணவனின் அருகாமை களிப்பை ஏற்படுத்தியது.

இண்டர்போல் உபயமாக இன்பாவிடம் வாடகைக் கார் இருந்தது. ஒரு நாளோ இரண்டு நாட்களோ வைத்துக் கொண்டு ஊரை விட்டுக் கிளம்பும் போது திருப்பித் தந்து விடலாம். டிரைவர் ஸீட் இடப்புறம்; சாலையின் வலப்புறம் கார் செல்ல வேண்டும் என்பதை மறக்காமலிருந்தால் போதும்; கார் ஓட்டுவது ஒரு சுகானுபவம். சாலையா அது? வழவழப்பாகக் கண்ணாடிபோல். ஆனால் உறுதியாக. சொகுசு காரோ புஷ்பக விமானம் போல் காற்றில் மிதப்பதாகத் தோன்றியது. போக்குவரத்து

என்னளவும் பேதம் இராது. வாழ்க்கை முறையிலும் (பொருளாதார ரீதியிலும்) பேதம் இல்லாமல் எல்லாரும் எளிமையாக இருந்து விட்டால் கொஞ்சம் கூடப் பொறாமை, வயிற்றெரிச்சல் இருப்பதற்கு இடமில்லாமல் போகும்.

அந்த மாதிரி நிலையை உடனே ஏற்படுத்துவதற்கான தைரியமும், தியாக புத்தியும் நமக்கு இருந்தாலும் இல்லாவிட்டாலும், இப்படிப்பட்ட ஒரு ideal-ஐயாவது (லக்ஷ்ய நிலையையாவது) நாம் புரிந்து கொண்டால், கொஞ்சம் கொஞ்சமாக வழி திறக்க இடமுண்டாகும். இதற்குப் பராசக்தி அநுக்ரஹம் செய்ய வேண்டும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.



ஊசியில் நூலைக் கோக்க வேண்டுமானால், நூல் முனையைக் கூராக்கி, நீட்டிக் கொண்டிருக்கும் பஞ்சுத் துணுக்குகளை எடுத்தெறிய வேண்டும். அப்பால் ஊசியின் காது வழியாக நூல் எளிதாகப் போகும். அது போல ஈசுவரனிடம் உனது மனத்தையும் இருதயத்தையும் ஒருமிக்கப் பண்ண வேண்டுமானால், அடக்கத்தோடும் பணிவோடும் வீண் கர்வமில்லாதவனாய் இருந்து, ஆசைகளாகிய பரந்து நிற்கும் துரும்புகளைக் களைந்தெறிய வேண்டும்.

– ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர்

நிறையத்தான். ஆனால் ஒழுக்கம் இருந்தது. அதனால் ஓட்டுவது சுலபமாயிருந்தது. சாலைகளுக்கான ஒரு வரைபடம் வைத்துக் கொண்டு பாதை கண்டுபிடித்துச் செலுத்தினான். ஆங்காங்கே அறிவிப்புப் பலகைகளும் வழி காட்டின.

"உங்களை நான் சந்தித்து, உங்களோடு காரில் செல்வதை சூர்யா சுவாமிக்குத் தகவல் தெரிவிப்பார்கள் அல்லவா?"

"நிச்சயம். இப்ப கூட நமக்குப் பின்னால் வர கார்ல அவன் ஆட்கள் இருப்பாங்கன்னு நினைக்கிறேன். செல்லுலர் ஃபோன்ல நேர்முக வர்ணனை கொடுத்திட்டிருப்பாங்க."

சிரித்தாள். "அவங்களுக்கு நீங்க என் கணவர் என்பது தெரியாது!" என்று கூறிவிட்டு மறுபடி கலகலவென்று சிரித்து அவன் தோளில் சாய்ந்தாள்.

"ஆமா, கண்டவனோட நீ ஜாலியா ஊர் சுத்தறேன்னுதான் குருஜிக்கு செய்தி போகும். ராத்திரி அவர்கிட்டேயிருந்து நீ ஃபோன் எதிர் பார்க்கலாம். 'ரொம்ப தேறிட்டே! புருஷனுக்கு இப்படி துரோகம் பண்றியே'ன்னு கேட்கப் போறார்!"

தாங்க முடியாமல் மனம் விட்டுப் பெரிதாகச் சிரித்தாள் சாயா. உற்சாகம் கரைபுரண்டு ஓடியது.

"சிரிக்க முடியறப்பவே நல்லா சிரிச்சுடு; நாளைக்கு நிறைய ஆபத்துக்களை நாம் சந்திக்க வேண்டியிருக்கும்" என்றான்.

குன்றின்மேல் செல்வது போன்ற உணர்வே ஏற்படவில்லை. பாதை வளைந்து வளைந்து உயரவில்லை. என்றாலும் காரை விட்டு இறங்கி, அடர்ந்த சோலை வழியே ஒற்றையடிப் பாதையில் நடந்து, அதன் முடிவில் பார்த்தால் அந்தக் காட்சி பிரமிக்க வைத்தது!

ஒரு குன்றின் சரிவில் படிப்படியாக உயர்ந்த மேடைகள். கீழ்ப்படியிலிருந்து நோக்கினால் இன்னும் கீழே ரைன் நதியும் மைன் நதியும் கம்பீர அமைதியுடன் ஒன்று கலந்து, பசுமையான மலைகளின் பின்னணியில் ஒரே ஆறாக முன்னேறும் காட்சி. கப்பல் என்றே கணிக்கத் தக்க அளவில் பிரம்மாண்டப் படகுகள், சரக்கையும் உல்லாசப் பயணிகளையும் ஏற்றிச் சென்றன. பாதாளத் தொலைவில் உள்ள இவற்றையெல்லாம் குன்றின்மேலிருந்து கிட்டத்தில் பார்க்க வசதியாக டெலஸ்கோப்புகாக போட்டால் இயங்கியது.

"நீங்கதான் ரைன், நான்தான் மைன்; இணைவோம்!"என்று ஒண்டிக் கொண்டாள். சுற்று வட்டாரத்தில் நிறையக் காதலர்கள் அதே போன்ற நிலையில் இருந்தது துணிவைத் தந்தது.

ஒருவர் இடையை ஒருவர் சுற்றி வளைத்தவாறே திரும்பினால், ஆறுகளுக்கு எதிர்ப்புறம், குன்றுச் சரிவில், உயர்ந்து உயர்ந்து செல்லும் மேடைகளின் உச்சியில்,அப்பாடி! எவ்வளவு பெரிய சிற்பக் காட்சி!

ஜெர்மனியின் எல்லைப் பகுதிகளை ஆக்கிரமித்து முன்னேறிய பிரெஞ்சு படைகளை இந்த ஆற்றங்கரையில் தடுத்து நிறுத்தியது மட்டுமல்லாமல், பின்வாங்கவும் செய்த ஒரு மகத்தான ஜெர்மானிய வெற்றியின் நினைவுச் சின்னம். ஜெர்மானிய மன்னரும் சரணடையும் பிரெஞ்சு தளபதியும் ஆளுயரக் கல்லோவியங்கள் என்றால் அதன் இருபுறமும் ரைன் நதி தேவதையும் யுத்த தேவதையும் மூன்றாள் உயரச் சிற்பங்கள்! 'இரண்டு தேவதைகளும் தந்தை நாட்டைக் காக்க வேண்டும்' என்ற



''நீங்க பறவை வளர்க்கிறதை என்கிட்ட சொல்லவே இல்லையே? இது என்ன பறவை? இவ்வளவு சின்னப் பறவையை நான் பார்த்ததே இல்லை.''

''நாசமாப் போச்சு! அது பறவை இல்லை. எங்க வீட்டுக் கொசு.''

— என். உஷாதேவி

---

பிரார்த்தனை கீழே கவிதையாகப் பொறிக்கப்பட்டிருந்தது.

"இங்கே உட்கார்"என்று ஒரு சிமெண்ட் இருக்கையைச் சுட்டிக் காட்டினான். பக்கத்தில் கால் தூக்கி ஊன்றி, முழங்கால்மேல் கரம் பதித்துக் குனிந்து, "கவனமாய்க் கேள்" என்றான். தன் திட்டம் விவரித்தான். சுற்று வட்டார சுந்தர அழகெல்லாம் காணாமல் போய், அடுத்து வரும் ஆபத்துக்கள் திரை ஓவியமாயின.

மாலை மயங்கும் நேரம் அருகே இருந்த ஒரு கிராமத்துக்கு அழைத்துப் போனான். பழைமைத் தோற்றம் மாறாத, அதே சமயம் புதுமைப் பொலிவு குன்றாத வீடுகள்; பெரிய பெரிய கூழாங்கற்கள் பாவிய, அப்போதுதான் அலம்பி விடப்பட்டது போன்ற சந்துகள்; ஜெர்மானிய கிராம இசை மிதந்து வந்த உணவு விடுதிகள்; இசைக்கேற்ப நடனமாடிய ஜோடிகள். காலாற நடந்தபோது மறுபடி சாயாவின் உள்ளத்தில் உல்லாசம் துளிர்த்தது.

பிராங்க்ஃபார்ட்டுக்கு அவர்கள் திரும்பிய போது அது வண்ண விளக்குகளில் ஜொலித்துக் கொண்டிருந்தது.

''பசிக்கிறதா? இந்திய ரெஸ்டாரண்ட் தேடுவோமா?''

''வேண்டாம்; கொஞ்சம் பழங்களும் இரண்டு பால் பாக்கெட்டும் வாங்கிட்டு ஹோட்டல் ரூமுக்குப் போயிடலாம்.''

''பாலும் பழமுமா? இது என்ன முதலிரவா?''

"சீ!" அவன் தோள்களைப் பொய்க் கோபத்துடன் குத்தினாள். பிறகு, "ஒரு விதத்தில் அப்படித்தான். வெறுத்து ஒதுக்கினவ, புத்தி தெளிஞ்சு திரும்பியிருக்கேன். புத்தம் புதிய சூழல்ல நம்மோட இந்த எதிர்பாராத சந்திப்பு, ஏதோ மறு ஜென்மத்துல நடக்கிற மாதிரிதான் இருக்கு."

"சரி, எங்க தங்கியிருக்கே, சொல்லு."

ஹோட்டல் கார்டு எடுத்துக் காட்டினாள். வழி விசாரித்துப் போனார்கள்.

மஞ்சம் அவர்களை ஏந்திக் கொள்ளக் காத்திருந்தது.

அவர்கள் எதிர்பார்த்தபடியே நள்ளிரவுக்கு மேல் சூர்யாசுவாமியிடமிருந்து ஃபோன் வந்தது.

"சாரதா! உன் புருஷன்தான் உனக்குத் துரோகம் பண்ணினானென்றால் நீயும் தாசி போல் நடந்து கொள்ளலாமா?"என்று கோபமாகக் கேட்டார்.

"வாயை டெட்டால் போட்டு அலம்புங்க. இங்க என் கூட இருக்கிறது என் கணவர்தான்."

"என்ன! இன்பசாகரனா!"

"ஆமாம்."

"உன்னைத் தேடிக் கண்டு பிடிச்சுட்டானா? என்னிடமிருந்து பிரிச்சு அழைச்சுட்டுப் போக வந்திருக்கானா? சாரதா! உன்னை எச்சரிக்கிறேன்! நான் கொடுத்த வேலையை நீ இன்னும் முடிக்கலே. முடிக்காத வரை உன் உயிர் உனக்குச் சொந்தமில்லே! எந்தக் கணமும் பறிச்சுடுவேன். இன்பாகிட்டயும் சொல்லிவை! உங்க உடல்கள் கூட ஊர் போய்ச் சேராது!"

''தெரியும், தெரியும்''என்றாள். இன்பா தயாரித்துத் தந்திருந்த நாடக வசனம் பேசத் தயாரானாள்.

(தொடரும்)

---



காதலன் : உன்னை கட்ன புடைவையோடதானே வரச் சொன்னேன். நீ கையோட இத்தனை புடைவையை எடுத்துக்கிட்டு வந்திருக்கியே...

காதலி : இதெல்லாம் நான் கட்ன புடைவைதாங்க....

காதலன் : .....! ......! .....!

— செங்குன்றம் கே. ஆர்.



1995 டிசம்பர் 24
யுவ மார்கழி 9
மலர் : 54
இதழ் : 21

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## தேர்தல் நெருங்குது, ஊழல் பெருகுது!

புதிய பொருளாதாரக் கொள்கையின் அடிப்படையில் கட்டுப்பாடுகள் தளர்த்தப்படும் என அறிவித்தபோது, பெர்மிட்-லைசன்ஸ் ராஜ்யம் ஒழியும் என்று நாம் மகிழ்ந்தோம். 'ஆஹா! கப்பம் கட்டி, கையேந்தி நிற்கும் நிலை இனி இராது'என்று தொழிலதிபர்களும் சந்தோஷப் பட்டார்கள்.

ஆனால் மகிழ்ச்சி ரொம்ப காலத்துக்கு நீடிக்கவில்லை. அரசுத் துறை நிறுவனங்களைத் தனியார் மயமாக்கும் முயற்சியில் ஊழலும் லஞ்ச லாவண்யமும் தொடர்ந்தன. அதுவும் தேர்தல் நெருங்க நெருங்க இந்த அநியாயங்கள் அதிகரித்து வருகின்றன. இந்த வரிசையில் கடைசியாகச் சேர்ந்திருப்பது, டெலிகாம் ஊழல். அமைச்சர் சுக்ராமின் ராஜினாமாவை எதிர்க் கட்சிகள் ஆவேசமாகக் கோரும் அளவுக்கு இந்த ஊழல் விசுவரூபம் எடுத்துள்ளது.

தொலைபேசித் துறையைத் தனியார் பொறுப்பில் விட எண்ணிய அரசாங்கம், அவ்வசதி வழங்கப்படும் பகுதிகளை ஏ,பி,ஸி என்று மூன்று ரகமாகப் பிரித்தது.

ஏ - நிறைய லைன்கள் கொண்ட பிரிவு, பி - சுமாரான செறிவுள்ள பிரிவு, ஸி - அவ்வளவாக வர்த்தக வாய்ப்பு இல்லாத சின்ன கிராமங்கள்.

ஒவ்வொரு பிரிவிலும் பல வட்டங்கள். இவற்றுள் எந்தப் பிரிவில் வேண்டுமானாலும் எவ்வளவு வட்டங்களுக்கு வேண்டுமானாலும் விண்ணப்பிக்கலாம் என்று முதலில் அனுமதித்தார்கள்.

இந்த முடிவை திடீரென்று மாற்றிக் கொண்ட அரசாங்கம், ஒவ்வொரு நிறுவனமும், ஏ,பி பிரிவுகளில் எந்த இரண்டு வட்டங்களுக்கு வேணுமானாலும் விண்ணப்பிக்கலாம் என்று விதித்தது.

இதன்பிறகு இந்த எண்ணிக்கை திடீரென்று மூன்றாக உயர்த்தப்பட்டது!




வலுவான காரணம் அற்ற இந்த மாற்றத்தின் பின்னணிதான் பெரிய ஊழலாக இன்று வெடித்துள்ளது.

அமைச்சர் சுக்ராமுக்கு மிகவும் நெருங்கிய, ஹிமாசல் ஃப்யூசரிஸ்டிக் கம்யூனிகேஷன்ஸ் லிமிடட் என்ற நிறுவனம் ஒன்பது வட்டங்களுக்கு விண்ணப்பிக்க, கிட்டத்தட்ட 85,000கோடி ரூபாய் அவர்கள் கட்ட வேண்டிய நிலைமை! நிறுவனத்தின் மொத்த மதிப்பே எண்பது கோடி ரூபாய்தான்! எனவே 'நட்பு' நிறுவனத்தைக் காப்பாற்ற, அமைச்சர் உச்சவரம்பு விதியைத் திடீரென்று புகுத்தினார் என்பது எதிர்க்கட்சியினரின் குற்றச்சாட்டு.

இதனால் ஏகமாகக் குழப்பம். தவிர, குறைந்தபட்ச டெண்டர் தொகையை ஆரம்பத்திலேயே குறிப்பிடாததால் அத்தனை நிறுவனங்களும் கன்னாபின்னாவென்று தொகை குறிப்பிட்டு விண்ணப்பிக்க, மேலும் குழப்பம்!

'ஒரு கூட்டு பார்லிமென்டரி கமிட்டி அமைக்க வேண்டும்- ஊழலை விசாரிக்க வேண்டும்'என்கின்றன எதிர்க்கட்சிகள்.

இந்த வற்புறுத்தலுக்கு அரசு இணங்கினாலும் குழு அமைத்தல், விசாரணை, அறிக்கை போன்றவை முடிவதற்குள் அடுத்த தேர்தலே வந்து போய்விடும்!

எனவே, அரசின் யோசனைப்படி, சம்பந்தப்பட்ட ஃபைல்களை ஆராய ஒப்புக்கொண்டு, அவற்றில் கிடைக்கக்கூடிய ஆதாரங்களைத் தோண்டியெடுத்து அம்பலப்படுத்துவதே எதிர்க்கட்சிகள் செய்ய வேண்டிய காரியம்.

'ஊழல் நடந்துள்ளதை எதிர்க்கட்சியினர் ஆராய்ந்து ஊர்ஜிதப்படுத்தினால் ராஜினாமா செய்கிறேன்' என்கிறார் அமைச்சர் சுக்ராம்.

நடந்த சில தவறுகளுக்குத் தமது அனுபவமின்மையே காரணம் என்கிறார்.

எவ்வளவு அனுபவம் இருந்தால் இப்படி ஒரு சால்ஜாப்பைப் புனைந்துரைக்க முடியும்!

## தப்பினார் முதல்வர் ஜோஷி!

இருவேறு வழக்குகளில் உச்சநீதிமன்றம் மிக முக்கியமான இரு தீர்ப்புகளை வழங்கியுள்ளது.



மஹாராஷ்டிர முதல்வர் ஜோஷியின் தேர்வு செல்லுபடியாகும் என்பது ஒரு தீர்ப்பு.

சிவசேனா தலைவர் பால்தாக்கரே தேர்தல் விதிமுறைகளை மீறியவராகிறார் என்பது இன்னொரு தீர்ப்பு.

தேர்தல் பிரசாரத்தின்போது, 'தாம் ஜெயித்தால், மஹாராஷ்டிரா இந்தியாவின் முதல் ஹிந்து மாநிலமாக மலரும்'என்று ஜோஷி பேசியிருக்கிறார்.

ஜோஷி 'ஹிந்து மாநிலம்' என்ற சொல்லைப் பயன்படுத்தியது தவறுதான் என்றாலும் அதன் மூலமாக அவர் வோட்டுப் பெற முயற்சி செய்யவில்லை என்பது உச்சநீதிமன்றத்தின் முடிவு.

தாக்கரே, 'ஹிந்துத்வா', 'ஹிந்துயிஸம்' என்ற சொற்களை அதிகமாகப் பயன்படுத்தியிருக்கிறார்.

'இச் சொற்கள் குறுகிய மத நோக்கைக் குறிப்பவை அல்ல என்றாலும், தாக்கரே ஒரு படி மேலே போய் மதத்தின் பெயராலேயே வோட்டு கேட்டிருக்கிறார். அதனால் அவர் குற்றவாளி'-என்பதே உச்சநீதி மன்றத் தீர்ப்பு.

இரு தலைவர்களுமே கண்டனத்துக்கு உள்ளாகியிருப்பது குறிப்பிடத்தக்கது. எனினும், தீர்ப்பு ஜோஷிக்குச் சாதகமாக இருப்பதால் ஹிந்து ராஜ்யம், ஹிந்துத்வா போன்ற பதங்களைப் பயன்படுத்தும் முயற்சிகள் தொடரும்.

தலைவர்களின் மத அடிப்படையிலான பிரசாரமும் தூண்டுதலும் அபாயகரமான விளைவுகளை ஏற்படுத்தும்.

சமீபத்தில் நேஷனல் கான்ஃபரன்ஸ் தலைவர் ஃபாரூக் அப்துல்லா ஓர் ஆர்.எஸ்.எஸ். அனுதாபியால் தாக்கப்பட்டிருக்கிறார்!

இத்தகைய அசம்பாவிதங்களைத் தவிர்க்க, ஆக்கபூர்வமான திட்டங்கள், கொள்கைகளை முன் வைத்து வோட்டுக் கேட்க வேண்டும்.

எச்சரிக்கையாக இல்லாவிட்டால் ஹிந்துத்வா ஆயுதம், எய்பவரையே பதம் பார்த்துவிடும்.



• ரஜினி, எஸ்.வி. ரமணன் : நிகழ்ச்சித் தயாரிப்பில்...

# ஐந்து கார்கள்... ஐம்பது ரசிகர்கள்... ஆட்டோவில் குண்டர்கள்!

**தமிழகத்தையே நிமிர்ந்து உட்காரச் செய்த நிகழ்ச்சியை (ரஜினியின் பிறந்த நாள் பேட்டி) தயாரித்து வழங்கிய ஜெயஸ்ரீ பிக்சர்ஸ் எஸ்.வி. ரமணன்,தம் அனுபவங்களைச் சொல்கிறார்:**

## மிரட்டல்

**க**டந்த ஒரு மாத காலத்தில் எனக்கு ஏற்பட்ட அனுபவம் மறக்க முடியாதது. தினசரிகளில், ரஜினிக்குக் கேள்விகள் அனுப்புமாறு விளம்பரம் தந்தேனே... அப்போதிலிருந்தே மிரட்டல் மயம்தான்! ஒரு நாளைக்குப் பத்து போன்கள் வரும். அத்தனையையும் மீறி, படப்பிடிப்பு நடத்தி முடித்தேன். ரஜினி படங்களிலிருந்து பொருத்தமான காட்சிகளை, வசனங்களை, பாடல்களை 'க்ளிப்பிங்'காகச் சேர்த்து கேஸட் தயார் செய்தேன். பதினைந்து நாட்கள் சோறு, தண்ணீர் இல்லாமல் இரவு-பகல் கண் விழித்து உழைத்தோம். பணி முடிந்த சந்தோஷத்தைக் கூட அனுபவிக்க முடியவில்லை. கேஸட், டீவி ஸ்டேஷனுக்குப் போவதற்குள் எப்படியும் மடக்கி, அபகரித்து விட ஒரு கூட்டம் தயாராகிக் கொண்டிருக்கிறது என்று தகவல் வந்தது. ரஜினியோ ஊரில் இல்லை. உயிர் போனாலும் குறித்த நேரத்தில் கேஸட்டை நிலையத்தில் எப்படியும் ஒப்படைத்து விட முடிவு செய்தோம்.

## ஆட்டோவில் குண்டர்கள்

**டி**சம்பர் பன்னிரண்டு – காலை சுமார் பதினொரு மணி இருக்கும். டீ குடிக்கப் போன எங்கள் யூனிட்டைச் சேர்ந்த கேமரா அஸிஸ்டெண்ட் ஒருவர் ஓடி வந்தார். "சார், தெரு முனையில் நாலைந்து ஆட்டோக்களில் ஆயு

தங்களோடு ரவுடிகள் சிலர் காத்திருக்கிறார்கள். எப்படியும் கேஸட்டைப் பறித்து விடுவதாகப் பேசிக் கொண்டிருக்கிறார்கள்!" என்றார் பதைத்து. எனக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. போலீஸ் கமிஷனர் அலுவலகத்துக்கு போன் செய்தேன். உயர் அதிகாரிகள் எல்லோரும் மீட்டிங் போயிருப்பதாகச் சொன்னார்கள். ஆழ்வார்பேட்டை காவல் நிலையத்தைத் தொடர்பு கொண்டபோது, 'நேரில் வந்து எழுத்து மூலம் புகார் கொடுங்கள்' என்று சொல்லி விட்டார்கள். அதற்கெல்லாம் ஏது சமயம்?

உடனே வெளியூர் சென்றிருந்த ரஜினிக்கு போன் செய்தேன். 'கேஸட், டீவி நிலையம் போய்ச் சேருமா என்று சந்தேகமாக உள்ளது' என்றேன். அவர், "கவலைப்படாதீர்கள், நான் பார்த்துக் கொள்கிறேன்" என்று சொல்லி, போனை வைத்து விட்டார்.

அடுத்த சில நிமிடங்களில் ரஜினி ரசிகர் மன்றத் தலைவர் சத்யநாராயணாவும், சுமார் ஐம்பது ரஜினி ரசிகர்களும் எங்கள் ஜெயஸ்ரீ பிக்சர்ஸ் வாசலில் வந்து பாதுகாப்பாக நின்று கொண்டார்கள்.

ஒரு கலவரம் மூளுவதற்கான ஆரம்ப அறிகுறி போலத் தோன்றினாலும் கடவுள் அருளால், வந்திருந்த குண்டர்கள், ரஜினி ரசிகர் படையைப் பார்த்து, பயந்து ஆட்டோக்களில் திரும்பி விட்டார்கள்.

## ஐந்து கார்களில்...

இதற்கிடையில் சோவுக்கு நான் தகவல் சொல்ல, அவர் உதவிக்கு வந்தார். புகார் கொடுத்த சில மணி நேரங்களுக்குப் பின் போலீஸ் வந்தது.

ஒருவழியாக, பிற்பகல் இரண்டு மணிக்கு கேஸட்டை எடுத்துக் கொண்டு கிளம்பினேன். ஐந்து கார்கள்! வழியில் யாரும் மடக்கிப் பறித்து விடக் கூடும் என்பதால், முதல் வண்டியில் ஒரு டம்மி கேஸட் வைத்து, அதற்குப் பாதுகாப்பாக(!) ஒரு காரில் சில ரஜினி ரசிகர்களை ஏற்றி, பீச் ரோடு வழியே தூர்தர்ஷனுக்கு அனுப்பி, பின்னாலேயே ஒரிஜினல் கேஸட்டை எடுத்துக் கொண்டு, மூன்று வண்டிகள் முன்னும் பின்னும் பாதுகாப்பாக வர, புதுப்பேட்டை, எக்மோர், காசிமேடு என்று நார்த் மெட்ராஸெல்லாம் சுற்றி, ஒருவழியாக தொலைக்காட்சி நிலையத்தில் கொண்டு போய்ச் சேர்த்தோம்.

## கத்திரி வைத்தார்களா?

இந்நிகழ்ச்சி, திட்டமிட்டு ஆளும் கட்சிக்குக் கலக்கம் உண்டுபண்ணவென்றே தயாரிக்கப்பட்டதென்றும், பிரதமரின் 'ஆசி'யுடன் தான் தூர்தர்ஷனில் ஒளிபரப்பானதென்றும் பேசுகிறார்கள். ஒரு தயாரிப்பாளன் என்ற முறையில், பொது மக்களின் கேள்விகளுக்கு ரஜினியிடம் பதில் வாங்கி, படமெடுத்து, கேஸட் தயாரித்து அளித்ததோடு என் பணி முடிந்து விட்டது. இதன் அரசியல் முகங்கள் எனக்குத் தெரியாதது; அப்பாற்பட்டது. தூர்தர்ஷனிலேயே கூட, அவர்களின் அளவுகோல்படி சிலவற்றை எடுத்து விடச் சொன்னார்கள். பெரிய பாதிப்பு இல்லாததால் ஒப்புக் கொண்டேன்.

## விதிகளை மீறினோமா?

எனக்குப் புரியவில்லை. என்ன விதிமுறையை யார் மீறி இருக்கிறார்கள்? எல்லாரைப் போலவும் விளம்பரதாரர் நிகழ்ச்சிக்கு நானும் அப்ளை செய்தேன். மக்கள் எல்லோரும் பார்க்கக்கூடிய மாலை 7:30 நேரத்தைக் குறிப்பிட்டுக் கேட்டிருந்தேன். அதுவும் இப்போதல்ல. சென்ற வருடம் ரஜினி பிறந்த நாள் சமயம். அப்போது வெறுமனே ரஜினி பற்றிய சிறப்பு நிகழ்ச்சியாகத் தயாரிக்கத்தான் எண்ணம். சீனியாரிட்டி பிரகாரம், எனக்கு டயம் அலாட் ஆவதற்கு ஒரு வருடம் ஆகிவிட . கால மாற்றத்தில், ஒரு நடிகராகவும் ஆன்மீகவாதியாகவும் மட்டும் இருந்த ரஜினிக்கு, ஒரு அரசியல் முகம் அவர் விரும்பியோ, விரும்பாமலோ கிடைத்து விட்டது.

யாரைக் குறைசொல்ல முடியும்? ஒன்று நிச்சயம். வெறும் பரபரப்புக்காக நான் இப்படி ஒரு நிகழ்ச்சியைத் தயாரிக்கவில்லை. ரஜினியுடன் எனக்குச் சுமார் பதினைந்து வருடகால நட்பு! எல்லாத் துறைகளிலும் அவருக்கு இருக்கிற ஆழ்ந்த பார்வையை வெளிக்காட்ட விரும்பியே இதனைச் செய்தேன். இதனை எனது 'வியாபார நோக்கு' என்று சிலர் குற்றம் சாட்டுவதுதான் வருத்தமாயிருக்கிறது.

## அதிக பாப்புலாரிட்டி

'எத்தனையோ தயாரிப்பாளர்கள், திரையுலக ஜாம்பவான்கள், ரஜினிக்காக என்னவும் செய்யத் தயாராயிருப்பவர்கள் இருக்கும் போது, நம்பிக்கைக்குரியவனாக அவர் என்னைத்தான் தேர்ந்தெடுத்திருக்கிறார், இப்படி ஒரு நிகழ்ச்சி தயாரிக்க' என்பதை நினைக்கும் போது பெருமிதமாக இருக்கிறது.

முப்பது வருடங்களாக இந்தத் துறையில் இருந்து நான் சம்பாதித்த புகழ், பெருமையை விட இந்த இரண்டு நாள் நிகழ்ச்சி மூலம் எனக்குக் கிடைத்திருக்கிற பாப்புலாரிட்டி மிக அதிகம்.

பேட்டி : **ஔரங்கசீப்**



• ஆதிராஜாராம்!

# குற்றப் பத்திரிகைகள் திருப்பப்படுவதேன்?

வழக்கறிஞர் விஜயன் தாக்கப்பட்ட வழக்கில் சி.பி.ஐ. தாக்கல் செய்த குற்றப்பத்திரிகையில் குளறுபடிகள் இருந்ததால் நீதிபதி அதை ஏற்க மறுத்துத் திருப்பி விட்டார். பிறகு அவற்றைச் சரி செய்து, மீண்டும் தாக்கல் செய்தபோதுதான் ஏற்றுக் கொண்டார் என்ற செய்தி, பலருக்கு அதிர்ச்சியை அளித்திருக்கும்.



• விஜயன்

நீதிபதி எந்தக் காரணங்களுக்காகக் குற்றப் பத்திரிகையைத் திருப்பி விடலாம், மற்றும் குளறுபடியான குற்றப் பத்திரிகை தயாரிக்கப்பட யார் காரணம்? கிரிமினல் வழக்குகளில் முத்திரைப் பதித்து வரும் வழக்கறிஞர் ஆலந்தூர் ஆர்.எஸ். பாரதியிடம் கேட்டோம்.

"இந்த வழக்கைப் பொறுத்த மட்டில் எந்தக் காரணத்திற்காக திருப்பி விடப்பட்டது என்பது எனக்குத் தெரியாது. ஆனால் பல குற்றப்பத்திரிகைகள், நடைமுறைகளைச் சரியாக பின்பற்றாவிட்டாலும், சில நமூனாக்கள் (Forms) சரியாகப் பூர்த்தி செய்யப்படாமல் இருந்தாலும், திருப்பி விடப்படும். ஏனென்றால் குற்றப் பத்திரிகையுடன், சாட்சிகள் விவரம், கைப்பற்றப்பட்ட பொருட்கள் பற்றிய விவரம் போன்றவற்றை இணைக்க வேண்டியிருக்கிறது.

"நான் முதல்வர் மீது போட்டுள்ள டான்சி நில வழக்கில், குற்றப்பத்திரிகை திருப்பப்பட்டது. காரணம், என் தந்தை பெயரும், என் வயதும், குறிப்பிட்ட நமூனாவில் விடுபட்டிருந்தது. இது போல தேதி குறிப்பிடாமலிருந்தால், அல்லது தவறான தேதி போட்டிருந்தாலும் திருப்பி விடப்படும். சாட்சிகளின் விவரத்தில் எதுவும் குளறுபடியில்லாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். குற்றப்பத்திரிகையில் குளறுபடிகள் வருமானால் அதற்கு விசாரணை அதிகாரியே பொறுப்பு.

"கீழ் கோர்ட்டில், தாக்கல் செய்யப்படும் குற்றப்பத்திரிகையில் உள்ள விவரம் தான் சுப்ரீம்கோர்ட் வரை கவனத்தில் கொள்ளப்படும். அதை மேல் முறையீடுகளில் மாற்ற முடியாது. சில குற்றப்பத்திரிகைகள் குறிப்பிட்ட காலக் கெடுவுக்குள் தாக்கல் செய்யப்பட வேண்டும் என்று விதிகள் இருக்கின்றன. அந்தக் காலக் கெடுவை மீறும் குற்றப்பத்திரிகைகளும் திருப்பப்படும். அல்லது விசாரணையில் தாமதம் சுட்டி காட்டப்பட்டு வழக்கு தள்ளுபடி கூட செய்யப்படும்."

இதற்கிடையில் விஜயன் வழக்கைப் பரிசிலனை செய்த சுப்ரீம் கோர்ட் சி.பி.ஐ. விசாரணையை 'பலே, பேஷ்'என்று பாராட்டி, மீண்டும் மார்ச் மாதத்தில், வழக்கின் முன்னேற்றம் குறித்து அறிக்கை தாக்கல் செய்ய உத்தரவிட்டுள்ளது. அரசியல் சூழ்நிலைகள் மாறினாலும் வழக்கைப் பாதிக்காத வண்ணம் சி.பி.ஐ. செயல்படும் என்று நடுநிலையாளர்கள் எதிர்பார்க்கிறார்கள். ஏனென்றால் 'வளைத்துப்'போட வேண்டிய ஒன்றிரண்டு நபர்கள் இன்னமும் வெளியேயே இருக்கிறார்கள் என்று வழக்கறிஞர் வட்டாரம் கூறுகிறது.

-ஆர்.எஸ்.

• கைலாசநாதர் கோயில்....



# உள்ளமே கோயில்; உடம்பே ஆலயம்!

'கோவிலுக்குப் போக வேண்டும்' என்கிற ஆசை பலருக்கு வரும். ஆனால் கோவில் கட்ட வேண்டும் என்கிற ஆசை எத்தனை பேருக்கு வரும்?

கையில் பணமும் பலமும் இருக்கிற அகங்காரத்தால் கோவில் கட்டுகிறவர்களை விட்டு விடுவோம். உன்னதமான லட்சியத்தோடு, இப்படி ஒரு கோவில் இதுவரை கட்டப்படவில்லை என்று எல்லோரும் நினைக்கும்படி, பக்திசிரத்தையோடு திருப்பணி செய்கிற மனம் ஓர் ஏழைக்கு வந்தால்... வந்தால்... என்ன? வந்தே விட்டது!

அவர் ஓர் ஏழை அந்தணர். அன்றாட உணவுத் தேவைகளைத் தமது மரபுக்கேற்ப யாசகம் பெற்று உண்பவர். சேகரித்து வைத்துக் கொள்ளும் பொருளாதாரப் பாதுகாப்புப் பாதிப்புகளைத் தாண்டி, எல்லாம் ஈசன் செயல் என்று வாழும் ஞான வாழ்வினர். அவருக்கு ஓர் ஆசை வந்தது. சிவனுக்குக் கோவில் கட்ட விரும்பினார். சின்ன அளவில் அல்ல... பெரிய அளவில்... சோழ ராஜாக்களுக்கு இப்படி ஆசை வந்தால் கஜானா தாங்கும். ஏழை பிராமணருக்கு இப்படி ஆசை வரலாமோ?

சென்னைக்குப் பக்கத்தில் உள்ள திருநின்ற ஊரில்தான் அவர் வாழ்ந்தார். சென்ட்ரல் ரயில் நிலையத்தில் இருந்தும் மின்சார ரயில் அவ்வூர் வழி செல்கிறது. ஆனால் டிக்கட் வாங்கும் பலர் தின்னனூர் என்றே திருநின்ற ஊரை நசுக்கிப் போடுகிறார்கள்! திருநின்ற ஊர் என்று யாராவது முழுப் பெயர் சொல்லி டிக்கெட் கேட்டால் கிடைக்குமா என்பதும் பிரச்னை; அந்த ஊரில், அந்த அந்த மக்கள் அவர் அவர்க்குரிய சிலங்களை, கொள்கைகளைப் பேணியதால், கொள்கையாகிய 'திரு' நின்ற ஊர் அவ்வூர் என்று பெரிய புராணத்தில் சேக்கிழார் எழுதுகிறார். வைணவர்களோ வேறு காரணம் சொல்வார்கள். அவ்வூர்ப் பெருமானை ஆழ்வார் பாடாமல் போனதும்,

மகாலக்ஷ்மி (திரு) பெருமாளை ஒரு பிடி பிடித்து விட்டார். ஆழ்வாரோ மகாபலிபுரம் போய்ச் சேர்ந்து விட்டார். விழுந்தடித்துக் கொண்டு பெருமாள் மாமல்லபுரம் சேர்ந்து ஆழ்வாரிடம் பாட்டு வாங்கி வந்து பத்தினியைத் திருப்திப்படுத்தினார். பெருமாளைப் போக விட்டு 'திரு'நின்ற ஊர் அல்லூர் ஆகவே அது திருநின்ற ஊர் என்பது வைணவர் விளக்கம்.

அந்தத் திருநின்ற ஊரில் வாழ்ந்த ஏழை தான் பூசலார். அவர் சிவபக்தர். சிவனுக்குக் கோயில் கட்ட நினைந்து பொருள் தேடினார். முயன்று முயன்று ஆலயம் எடுக்கச் செல்வம் தேடியும் அவருக்குக் கிடைக்கவில்லை. அது தான் பெருமான் வைத்த சோதனை போலும். 'திரு நின்ற ஊரிலேயே 'திரு' கிடைக்கவில்லையென்றால் அது இறைவன் ஏற்பாடாகத்தான் இருக்க வேண்டும்.

மேலும் 'தொண்டை நன்னாடு சான்றோர் உடைத்து' என்பது பொன் மொழி. திருநின்ற ஊர் தொண்டை நாட்டின் உள்ளடக்கம். எனவே சான்றோர்கள் மிக்க மண்ணிலேயே கோயில் எழுப்ப ஆதரவு இல்லாமல் போகுமா? கொடுக்கக் கூடாது என்னும் எண்ணம் வருமா? நிச்சயம் இறையருள் தீர்மானம் தான் அது! எவருமே உதவவில்லை... தினையளவும் செல்வம் சேரவில்லை.

சோதனை இல்லாத சாதனையில் என்ன பெருமை இருக்கிறது! சோதனை பலருக்கு வேதனையில் முடிகிறது. சிலருக்குச் சாதனையில் முடிகிறது! கொஞ்சமும் கலக்கம் இன்றித் தமது திருப்பணியைத் தொடங்கினார்.

எப்படி? இருந்த இடத்தில் இருந்தபடியே மனத்தால் கோயில் கட்டும் மகத்தான முடிவு எடுத்தார். ஒரு மாயசாதனை போல் பளிச் சென்று மனசுக்குள் கோயில் ஏற்படுத்திப் பார்க்கும் வித்தை செய்யவில்லை. கோயில் திருப்பணி தொடங்க நாள் குறித்தார். மாபெரும் நிலப்பரப்பை மனத்தாலேயே வாங்கினார். சுத்தம் செய்ய எத்தனை நாள் ஆகுமோ அத்தனை நாள் மனத்தாலேயே சுத்தம் செய்தார்.

குறித்த நாள், குறித்த வேளையில் திருப்பணி தொடங்கியது. எத்தனை ஆட்கள் எத்தனை நாட்களில் அஸ்திவாரம் தோண்டுவார்களோ அத்தனை நாட்கள் ஆனது! மெல்ல மெல்ல கருங்கல் கோவில் நெஞ்சில் வளர்ந்தது. ஆறு மண்டபங்கள்... ஆகாசத்தைச் சீறும் ராஜ கோபுரம்... ஆகம விதிப்படி அமைந்த அருமைக் கற்கோயில். சில்லென்று குளிரடிக்கும் சீரிய தெப்பக்குளம்.. என்று முழுமையான கோவிலை மெல்ல மெல்ல அமைத்தார்!

ஆண்டுகள் நகர்ந்தன. முதுமை வர வர மரணம் வருமோ என்கிற எண்ணம் வந்தது. வாழ்வு நிலையற்றது என்று வருந்தி தலைமைத் தச்சரை அழைத்தார். கோவிலை முடிக்கு முன்பு மரணம் வந்து விடுமோ என்ற தம் கவலையைத் தெரிவித்தார். அவரும் உன்னதமான சிற்பி. இனி இரவும் பகலும் வேலை செய்து திருப்பணியை விரைவில் முடித்துத் தருவதாக வாக்களித்தார். விரைவாக நடந்தது திருப்பணி.

கும்பாபிஷேகம் செய்ய ஆகம அறிஞர் துணையோடு (மனத்தால்தான்) நாளும் நேரமும் நன்கு குறித்தார். அதே கால கட்டத்தில் காஞ்சிபுரத்தில் கல்லால் ஒரு கலைக் கோயில் கட்டிக் கொண்டிருந்தான் பல்லவ மன்னன். கைலாசம் சிவனுக்குக் கஷ்டமாக இருந்தால் காலமெல்லாம் இருக்கும்படியாகக் கைலாச நாதர் கோவில் கட்டி முடித்தான். அவனது பட்டத்து மகிஷியே அபிநயம் பிடிக்க அதனைச் சிற்ப விற்பன்னர்கள் சிலையாக வடிக்க அற்புதமான ஆலயம் அங்கே உருவானது.

இரண்டு இடத்திலும் ஒரே நாளில் ஒரே நேரத்தில் கும்பாபிஷேகம். யாக பூஜைகள் தொடங்கி விட்டன. இரண்டு இடத்திலும் ஒரே நேரத்தில் இருக்கக்கூடிய இறைவனுக்கு என்ன தோன்றியதோ தெரியவில்லை. அரசன் கனவில் சிவபெருமான் தோன்றினார். ஆலய குடமுழுக்கை மாற்றி மற்றொரு நாள் நடத்தும்படி மன்னனுக்கு ஆணையிட்டார். ஆணையை ஏற்ற அரசன் கேட்காமலேயே காரணமும் சொன்னார்... "திருநின்ற ஊரில்

## சுகி சிவம்

வாழும் பூசலார் என்ற அன்பர் கட்டிய ஆலயத்துள் நாளை நாம் எழுந்தருளுவதால் நீ எடுத்த திருக்கோவிலுக்கு நம்மால் வர இயலாது" என்றார். ஒரே நேரத்தில் இரண்டு இடத்தில் இருக்க முடியாது என்று சொல்ல சிவபெருமான் என்ன உள்ளூர்ப் பேச்சாளரா? அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்தவரால் இரண்டு இடத்திலுமா இருக்க முடியாது?

பூசலார் மேன்மையை உலகம் புரிந்து கொள்ளும் பொருட்டு தமது பெருமையை இறைவன் தாழ்த்திக் கொண்டார்! அரசன் அமைத்த ஆலயத்தை விட அன்பன் அமைத்த ஆலயம் தமக்கு உவப்பு என்று அறிவித்தார். 'நின்ற ஊர் பூசல் அன்பன் நெடிது நாள் நினைந்து செய்த நன்று நீடு ஆலயம்' என்று சிவபெருமான் சொல்வதாக எழுதினார் சேக்கிழார். 'நெடிதுநாள் நினைந்து செய்த' என்கிற வரியில் பூசலாரின் நெடுநாள் உழைப்பு விளக்கப்படுகிறது.

மன்னரும் பணிந்து வணங்கி, இறைவன் ஆணையை ஏற்று, குடமுழுக்கைத் தள்ளி வைத்தார். படைகுடி அமைச்சரோடு திருநின்ற ஊர் புறப்பட்டார். பூசலார் கட்டிய கோயிலைக் காண விரும்பினார். எந்தக் கோவிலும்

அந்தப் பகுதியில் கட்டப்பட்டதாக அடையாளமே இல்லை! மக்கள் யாருக்குமே மன்னர் வருகைக்கான காரணம் விளங்கவில்லை. அரசருக்கோ கோவில் எதுவுமே கண்ணுக்குத் தெரியவில்லை! பூசலாரைத் தேடினார்.

மன்னர் முன்னர் அவரை அழைத்து (இழுத்து?) வருவதாக மக்கள் கூறினர். மன்னரோ அவர் இருப்பிடம் சேர்ந்து, திருவடி பணிந்து, "தாங்கள் ஆலயம் கட்டி இருப்பதாகவும், அதன் குடமுழுக்கில் பங்கேற்பதால் நான் கட்டிய கோவிலுக்கு வர இயலாது என்றும் சிவபெருமான் கூறினாரே. சுவாமி... அந்தக் கோவிலைக் கண்டு குடமுழுக்கு காண ஓடி வந்தேன்" என்றார். பூசலார் விழிகளில் நீர் திரண்டது. 'என்னையும் ஒரு பொருட்டாய்க் கருதி இறைவர் இப்படி கூறினார்' என்று கரைந்தே போனார். பின்னர் இதயத்தில் எழுப்பிய கற்கோவிலைப் பற்றி அரசருக்கு உரைத்தார்.

ஊன விழிகளைத் திறந்து வைத்து அந்த உன்னதமான கோவிலைக் காண முடியாது என்று உணர்ந்த மன்னன், விழிகளின் இமைகளை இழுத்து மூடினான். மனக்கண் திறந்தது. பூசலார் கட்டிய பொற்கோவில் தெரிந்தது! லட்ச லட்சமாய் மனிதரும் தேவரும் சித்தரும் வந்து கும்பாபிஷேகம் காண நிற்பது மனத்திரையில் விரிந்தது! யாக குண்டத்தில் பன்னிரண்டு அங்குலம் உயரத்தில் அக்கினி வலம் சுழன்று எழுகிற காட்சி தெரிந்தது. மறைமொழி முழங்க, மந்திரம் விளங்க, தேவகுருவே வந்து பூர்ணாஹுதி வழங்கும் காட்சி புரிந்தது.

ஆறுவேளை, முப்பத்து மூன்று யாக குண்டங்களின் மூலம் பூசிக்கப் பெற்று, வெள்ளிக் குடத்தில் நீர் வடிவில் உள்ள சிவசக்தியை, ஆசார்யர் சுமந்து வர, மங்கல இசை முழங்க, 'சிவசிவ ஹரஹர' என்று மக்கள் வணங்கும் அழகு புரிந்தது. ராஜகோபுரத்தின் உச்சியில் அந்தப் புனித வேளையில் அபிஷேகம் ஆகும் அற்புதம் தெரிந்தது! கண்களைத் திறந்தான் பல்லவ மன்னன். பூசலாரின் புனித விழிகளிலும் கட்டுக் கடங்காத கண்ணீர்க் கங்கை கரை புரண்ட காட்சியைக் கண்டு கைதொழுதான்!

மனிதன் கோவிலுக்குப் போவதே தன்னைக் கோவிலாய் ஆக்கத்தான். சீவனை (உயிரை) சிவனாக்குவதே வாழ்க்கை லட்சியம். அப்படி ஆக்கிவிட்டால் ஒவ்வொரு உடம்பும் ஒவ்வொரு ஆலயம்.. திருமூலர் வாக்கின்படி நாமெல்லாம் 'நடமாடக் கோயில்'. தலம் தலமாகப் போய்த் தரிசிப்பது வழிபாட்டில் முதல் நிலை. தன்னையே தலமாக்குவது நிறைநிலை. உடம்பே திருத்தலம். அதில் பெருகும் கண்ணீர் புண்ணிய தீர்த்தம்... இதனைத் தரிசிக்கப் பயணம் போவதானால் உள்நோக்கிப் போக வேண்டும். மற்றைய தலயாத்திரையில் இரு விழிகளையும் அகலத் திறக்க வேண்டும். இந்தத் தலயாத்திரையில் இறுக மூடிக் கொள்ள வேண்டும். நமது உடம்புக் கோயில் ஒரு தலம். தமிழில் ஒரு என்பது ஒப்பற்ற என்றும் பொருளில் வரும். அதற்கு ஒரு பாடல் உண்டு.

*உள்ளம் பெருங்கோயில் ஊன் உடம்பு ஆலயம்*
*வள்ளல் பிரானார்க்கு வாய் கோபுர வாசல்*
*தெள்ளத் தெளிந்தார்க்கு சீவன் சிவலிங்கம்*
*கள்ளப் புலன் ஐந்தும் காளா மணிவிளக்கு*

- என்பது திருமந்திரம். இதன் பொருளைத் தேடுவதை விட பொருளாக நாம் ஆவதுவே நல்ல நயம்.

(முற்றும்)

## 'சுருக்-நறுக்' போட்டி — 8; முடிவுகள்...

### சிறுகதை என்பது....

- வார்த்தைகளுக்குள் அடங்கிக் கொள்ளும் வாழ்க்கையின் துணுக்குத் துண்டு.
  —எஸ். லக்ஷ்மிகாந்தன், சேலம் – 4.

- எழுத்தாளர்கள் வாசகர்களுக்குத் தரும் "பேஜர்" செய்தி.
  – ஜி. சரவணபவன், திருச்சி – 5.

- விருட்சத்தைத் தன்னுள் சுமந்திருக்கும் வீரிய விதை!
  – கே. வெங்கடேசன், வேலூர் – 4.

- மனவெளிப்பாட்டின் சிறிய புள்ளி.
  – யோகம்பாஸ்கர், கடலூர் – 2.

- வாழ்க்கை நீரோட்டத்தின் ஒரு சுழிப்பின் சித்திரிப்பு.
  – கே. எம். ஜக்கரியா, எலந்தங்குடி.

- பல்லவன் பயணத்தில் படித்தால் கூட சிறுவன் துப்பிய பப்பிள்கம்மாய் நெஞ்சில் ஒட்டிக் கொள்வது.
  – ஜோதி, மதுரை – 20.

- கதாபாத்திரத்தையும், சம்பவத்தையும் இணைக்கும் அழகிய முடிச்சு.
  – எஸ். எஸ். பூங்கதிர், திருவெண்ணெய்நல்லூர்.

(பிரசுரமாகியுள்ள ஒவ்வொன்றும் ரூ. 50/- பரிசு பெறுகிறது)

# HMV

## பெருமையுடன் வழங்கும்

## காரைக்குடி R. மணி அவர்களின்

(பிரபல மிருதங்க வித்வான்)

# ‘‘லய சித்ரா’’

# LAYA CHITHRA

**CARNATIC INSTRUMENTAL**




பங்கு பெற்ற கலைஞர்கள் :

| | | |
|---|---|---|
| G. ஹரிசங்கர் | – | கஞ்சிரா |
| T.V. வாசன் | – | கடம் |
| ஸ்ரீரங்கம் S. கண்ணன் | – | மோர்சிங் |
| B.V. பாலசாயி | – | புல்லாங்குழல் |
| R. பார்த்தசாரதி | – | வீணை |
| மதுரை T. ஸ்ரீநிவாசன் | – | மிருதங்கம் |
| V.B. மதுசூதனன் | – | தபேலா |
| R. சந்திரசேகரன் | – | கீ போர்டு |
| இசையமைப்பு | – | V.S. நரசிம்மன் & மதுரை T. ஸ்ரீநிவாசன் |




எல்லா கேசட் வியாபாரிகளிடமும் கிடைக்கும்

# புது மனைவி

"ராகவன்... போன்கால்!"

ஹெட்கிளார்க் அழைத்தார்.

எதிர்முனையில் பேசிய அவன் மனைவி வசந்தியின் குரலில் உற்சாகம் கொப்பளித்தது.

"நான்தான்... தெருக்கோடி 'பூத்'திலேருந்து பேசறேங்க. கோயமுத்தூர்லேருந்து அப்பாவும் அம்மாவும் வந்திருக்காங்க..."

"ம்... ம்..."

"என்னங்க, குரலில் சுரத்தே இல்லை?"

"ஒண்ணுமில்லே... இங்க ஹெவி ஒர்க். அதுதான்... அது சரி, என்ன இவ்வளவு தூரம் திடீர் பயணமாம்?"

"அப்பாவுக்குக் கொஞ்சநாளா வயத்து வலியாம். டாக்டர்கிட்ட கூட்டிட்டுப் போகணுமாம். அப்புறம் சில ரிலேடிவ்ஸ், பிரண்ட்ஸ் வீட்டுக்குப் போகணுமாம். அதனால ஒரு அரை நாள் லீவு போட்டுட்டு வர முடியுமான்னு கேட்கச் சொன்னார்."

'உங்கப்பா அம்மாவுக்கு ஊர் சுத்திக் காட்ட நான் பியூனா இல்லை டூரிஸ்ட் கைடா?' என்று மனதுக்குள் குமைந்த ராகவன், புது மனைவியுடன் நேரடி மோதலைத் தவிர்க்க எண்ணி தேனாய்ப் பேசினான். "ஸாரிம்மா... இன்னிக்கு பார்த்து ஹெட் ஆபீஸ் இன்ஸ்பெக்ஷன்! இன்ஃபாக்ட் நான் வீட்டுக்கு வரவே ராத்திரி ஒன்பது மணியாயிடும்."

"பரவாயில்லை... நானே பாத்துக்கிறேங்க. நீங்க கவலைப் படாம வாங்க!" என்று சொல்லி போனை வைத்தாள் வசந்தி.

திருமணமானதிலிருந்து மூச்சுக்கு மூச்சு 'எங்கப்பா, எங்கம்மா' என்று பெற்றோர் புராணம் பாடி போரடித்தாள் வசந்தி. ஒரே பெண்ணான அவளுக்கு அவர்கள் மேல் அவ்வளவு பாசமாம்! இதனால் ஏகமாக எரிச்சலடைந்திருந்தான் அவன். எனவே இப்போது ஏகப்பட்ட வேலை என்று புளுகி ஒதுங்கிக் கொண்டான். 'அவர்கள் நன்றாகக் கஷ்டப்படட்டும்!' என்று ஒரு குரூரமான எண்ணம் ஏற்பட்டது.

ஆபீஸ் விட்டதும் 'உட்லண்ட்ஸி'ல் ஆர அமர டிபன், 'தேவி'யில் இங்கிலீஷ் படம் என்று இரவு ஒன்பதரை மணிக்கு வீடு திரும்பியவனுக்கு அதிர்ச்சி...

சோபாவில் அமர்ந்திருந்தது அவனுடைய அப்பாவும் அம்மாவும்!

"ஏண்டா, துரைக்கு அம்மா, அப்பாவைக் கவனிக்கக்கூட முடியாதபடி அவ்வளவு ஆபீஸ் வேலையோ...? பாவம், வசந்தி! மெட்ராஸுக்குப் புதுகன்னாலும் அசராம, முகம் கோணாம, ஆட்டோ ரிக்ஷாவிலே எங்களை எல்லா இடத்துக்கும் கூட்டிட்டுப் போனா... தங்கமான பொண்ணுடா... சரி சரி உனக்காகக் காத்துக் கிட்டிருக்கா... போய்ச் சாப்பிடு" என்றார்.

சமாளித்துக் கொண்ட ராகவன் "ஆபீஸ்ல இன்னிக்கு பயங்கர ஒர்க்குப்பா... சரி... கோயமுத்தூர்லேருந்தா வந்தீங்க?" என்று கேட்டான்.

"ஆமாண்டா! மருதமலைக்கு ரொம்ப நாளா ஒரு வேண்டுதலை நிறைவேத்தாம இருந்தேன். அதனால மதுரைலேருந்து மருதமலை போயிட்டு, கோயமுத்தூர் வந்து பஸ்ஸைப் பிடிச்சு வந்தோம்..."

சாப்பிடும் போது 'உர்'ரென்று இருந்த ராகவன் பெட்ரூமில் எரிந்து விழுந்தான். "முண்டம், கோயமுத்தூர்லேருந்து வந்திருக்காங்கன்னு நீ சொன்னப்போ உங்கம்மா, அப்பாதான் வந்திருக்கிறதா நினைச்சுட்டேன். வந்திருக்கறது எங்கப்பா, அம்மான்னு தெளிவா சொல்லக் கூடாதோ?"

வசந்தி மிரண்டு விட்டாள். விழிகளில் கண்ணீர் எட்டிப் பார்த்தது.

"சாரிங்க... என் தப்புத்தான்... எனக்கென்னமோ உங்கப்பா அம்மா, எங்கப்பா அம்மான்னு பிரிச்சுப் பேசணும்னு தோணலீங்க... எனக்கு ரெண்டு பேரும் ஒண்ணுதான்!..." என்று விசும்பியவளைத் தன் பக்கம் திருப்பிய ராகவன், இறுக அணைத்தான்.

- ஆர். ரகோத்தமன்

## கண்ணன் தந்த குழல்

அகாடமி அரங்கில் சௌராஸியா வாசித்துக் கொண்டிருந்தார். ஏஸி குளிரில் தம்புரா சுருதி தளர்ந்துவிட்டது. தந்தி முடுக்குவதற்குள் தபலா சுருதி போய்விட்டது. அதைத் தட்டி கொட்டிச் சரிசெய்யுமுன் சௌராஸியா சொன்னார் : "வாத்தியக் கலைஞர்கள் தங்கள் நேரத்தில் பாதியை சுருதி சேர்க்கவே செலவழித்துவிட நேர்கிறது. ஆனால் கிருஷ்ண பரமாத்மா ஓர் அற்புதமான வாத்தியத்தை உருவாக்கினார். சுருதி சேர்க்கின்ற பிரச்னையே இல்லாமல் எளிய மூங்கிலில் புல்லாங்குழல் உருவாக்கிவிட்டார்" என்றார். அன்று கச்சேரி கேட்ட நமக்குத் தோன்றியது கிருஷ்ண பரமாத்மா புல்லாங்குழலை மட்டுமா உருவாக்கினார்? அதை வாசிக்க ஓர் அற்புதக் கலைஞராக சௌராஸியாவையும் அல்லவா படைத்திருக்கிறார்!



## ஹவாயன் கிடார்!

மகாராஷ்டிர லலித கலாநிதி நடத்திய துளிதாஸ் சங்கீத சம்மேளனில் மேற்படி நிகழ்ச்சி என்றால் அசோக் லேலண்ட் ஃபைனான்ஸ் - முத்ரா இணைந்து நடத்திய கலைவிழாவில் கோட்டு வாத்தியம் ரவிகிரண் ஒரு புதிய வாத்தியத்தை அறிமுகப்படுத்தினார் : ஹவாயன் கிடார்! காதுக்குப் படுசுகம்; அவருடன் அவர் மனைவி ஜெயந்தி கிரண் வீணை. ஜுகல்பந்தியில், நவரசங்களை உணர்த்தும் ராகங்களைத் தேர்ந்தெடுத்து வாசித்து அமர்க்களப்படுத்தி விட்டார்கள்! கச்சேரி முடிந்தபோது நமக்கு மனமெல்லாம் அற்புத ரசம்தான்!

## பேச்சாவர்த்தனம்!

அசோக் லேலண்ட் ஃபைனான்ஸ் - முத்ரா வழங்கிய நிகழ்ச்சிகளில் மட்டுமின்றி அவர்கள் ராம ராவ் கலாமண்டபத்தை அலங்கரித்திருந்த அழகிலும் உயர்ந்த ரசனை பளிச்சிட்டது. கச்சேரி கேட்டதுடன் - பார்த்த அனுபவமும் இனிமை. ஆனால், அந்தச் சூழலையும் குலைக்கும் கொடுமையாக, ஒரு தனியாவர்த்தனத்தின்போது, உரத்த குரலில் பேச்சாவர்த்தனம் நடத்தித் தள்ளிவிட்டார்கள், ஒரு பத்திரிகை ஆசிரியரும் ஒரு பெண்மணியும். பத்திரிகை பேசுகிறதே, போதாதோ!



• டி.வி.எஸ் : காபி டபுள் ஸ்ட்ராங்!

• சௌராஸியா : கண்ணனுக்கு நன்றி!

## தொடரும் போட்டி!

பேச்சுக்கும் பாட்டுக்குமான போட்டி, சீசன் முடிய தூரத்தும் போலிருக்கிறது. கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸ் துவக்க விழாவில் மேடை நிறைய பேச்சாளர்கள். பெரும்பாலும் சம்பிரதாயமான 'bore'!

தாம் பேச்சிலும் சளைத்தவரல்ல என்று ஆங்கில ஏற்புரையில் நிரூபித்தார் இசைப் பேரொளி விஜய் சிவா.

மறுநாள் பாம்பே ஜெயஸ்ரீ, டி.வி. சங்கரநாராயணன் கச்சேரிகள் தொடங்கு முன்பும் கலைஞர்களை அறிமுகப்படுத்தி சபா நிர்வாகி பேசினார்! அந்த நேரத்தில் கூடுதலாக ஒரு பாட்டுக் கேட்கலாமே ஐயா!

ஐந்து மணி கச்சேரியில் ஜெயஸ்ரீ பாடிய பூர்வி கல்யாணி ராகத்தையே ஏழு மணி கச்சேரியில் டி.வி.எஸ். எடுக்க, ரசிகர்களிடையே பயங்கர சலசலப்பு! தொடர்ந்து வந்த 'காபி' ராகம் டபுள் ஸ்ட்ராங்!



அதை ரசிப்பதா அல்லது அதை ரசிக்கும் ரசிகர்களை ரசிப்பதா என்று குழப்பமே வந்துவிட்டது!

எம்.எஸ்.ஜி., உமையாள்புரம் சிவ ராமன், நாகராஜன் பக்கவாத்தியக் கூட் டணியுடன் டி.வி.எஸ். சரவெடியாக ஸ்வரம் பாட, வெளியே நிஜமாகவே சர வெடி - ஐயப்பன் பூஜைக்கும் இத தானே சீசன்!

## மயிலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸ் - உள்ளே :

பதினைந்து ரூபாய் இருக்கையில் பலத்த சர்ச்சை -

"இது பந்துவராளியா? பூர்வி கல்யாணியா?"

- பாடிக் கொண்டிருந்தவர்

• ரவிகிரண் - ஜெயந்தி : அற்புத ரசம்!

# ாட்டுக் கச்சேரியும் பேச்சுக் கச்சேரியும்!



லோகநாத சர்மா. இடைஞ்சலான குரலை ரொம்ப முயற்சி எடுத்துப் பாலில் ஊற வைத்துப் பதப்படுத்தியிருக்கிறார்.

பதினைந்து ரூபாய்க்கு அவர் பாட்டுடன் 'டான்ஸை'யும் காண முடிந்தது. அவ்வளவு தூரம் உடம்பு ஆடு ஆடென்று ஆடுகிறது மனிதருக்கு....!

இதைக் கண்டுகளிக்காமல் ஒரு ஐ.ஏ.பி. ஆசாமி, இந்தியன் எக்ஸ்பிரஸின் இம்பிரிண்ட் வரை கர்மசிரத்தையாக மனனம் செய்து கொண்டிருந்ததும் வயலின் மீரா அணிந்திருந்த வயலட் பட்டுப்புடவையைக் காட்டி "நன்னாருக்கு இல்லை?" என்று ஒரு மாமி தம் கணவரை அதிர்ச்சிக்கு உள்ளாக்கியதும் இருச்சி ஸ்வரன்சிங்கின் டிஷர் டிரான்ஸ்ஃபர் பற்றி ஒருவர் அங்கலாய்த்துக் கொண்டிருந்ததும் காவலுக்கு (ஏவலுக்கு?) நின்றிருந்த ஸ்கவுட் மாணவர்கள் ஊர்மிளா ஆராய்ச்சியிலிருந்ததும் ஸைட்-லைட் தகவல்கள்.

**மயிலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸ் - வெளியே :**

பலப்பல விளம்பர பேனர்கள் ஸ்பான்சர்களின் சாகசங்கள். கேஸட் ஸ்டாலில் நல்ல வியாபாரம் - உன்னி கிருஷ்ணனும் செம்மங்குடியும் சௌம்யாவும் வேகமான விற்பனை. விவா பாட்டில்கள் நிறைந்த கடை பார்க்க அழகாக இருந்தது. ("சாம்ப்பின் பாக்கெட் கிடையாதா?" - கார் வைத்திருக்கும் ஒரு கனவான்.)

காண்டீனில் காப்பி தரமாக இருக்கிறது. (கொஞ்சம் ஷுகர் குறைக்கலாம் மாஸ்டர்.)

"இன்னிக்கு ஒன்னும் சரியில்லை. நாளன்னைக்கு வியாபாரம் பிச்சிக்கும்" என்று கவுண்டர் நபர் யாரிடமோ சொல்லிக் கொண்டார்.

அவர் சொன்ன 'நாளன்னைக்கு'ப் பாட இருந்தவர் சாருமதி ராமச்சந்திரன்.

— நமது நிருபர்கள்

## முத்துராஜன்

# நெஞ்செல்லாம் நீலநிறம்

விடிகாலைப் பனிமூட்டங்களை முண்டாக கட்டிக் கொண்டு தொலைவில் தெரிந்த மேற்குத் தொடர்ச்சி மலை முகடுகளைப் பார்த்தவாறு வாசல் திண்ணையில் உட்கார்ந்திருந்த என் கையில், 'புடி பொன்னு' என்றபடி காப்பி தம்ளரை தந்துவிட்டுப் போனாள் அத்தை.

எதிர்த்திண்ணையில் உட்கார்ந்திருந்த மாமா நாலே மடக்கில் காப்பியை முடித்துக் கொண்டு துண்டால் மீசையை வழித்தபடி பேச்சைத் தொடர்ந்தார். சங்கதி அதேதான்... நேற்று இங்கே வந்ததிலிருந்து ராத்திரி தூங்கும் வரை மாமா என் காதில் பாராயணம் பண்ணிக் கொண்டிருந்த சங்கதி....

'ஒம்பது சென்டு இடம், ஓட்டு வீடு, பத்து தென்னை, கட்டிப் புடிக்கிற கணக்கா புளிய மரம் மூணு... புளிய மரம் மட்டும் ஒவ்வொண்ணும் இன்னைய தேதிக்கு என்ன விலை போகும் தெரியுமா பொன்னு? மூணாயிரத்துக்கு மேலேதான்... இதல்லாம ஜாதி மாமரம் ரெண்டு, எல்லாத்தையும் வித்து காசு பண்ணிக்கிட்டு மகள் வீட்டோட போய்ச் சேர்ந்திடலாம்னு இருக்காரு பக்கத்து வீட்டுப் பெரியவரு....'

தலையாட்டிக் கொண்டிருந்தேன்.

"பெரியவரு ஒண்ணேமுக்கால் லட்சம் விலை சொல்லிக்கிட்டிருக்காரு. நமக்கானால் ஒண்ணரைக்கே முடிச்சுடலாம். குறுக்காலே இருக்கிறது முள்ளு வேலி மட்டும்தான். அதை எடுத்திட்டா போதும், நம்ம வீட்டோட ஏகமா சேர்ந்துடும். அறுவடைப் பணம், கோவாப்பரேட்டிவ் பாங்கு லோன் அப்படி இப்படின்னு ஒரு லட்சத்துக்கு மேல் நானே ஒப்பேத்திடுவேன். மீதிக்குத்தான் வழி தெரியலே..." மோவாயைத் தடவியபடி மாமா என் முகத்தைப் பார்த்தார்.

பக்கத்து வீட்டை வளைத்துப் போட மாமா படுகிற இந்த அவஸ்தை எனக்கு விசித்திரமாக இருக்கிறது. இது என்ன அநியாய ஆசை! அறுபதைத் தாண்டிய வயதில், பிள்ளை குட்டி இல்லாத மாமாவுக்கு ஆஸ்தி சேர்க்கிற ஆசை அவசியம்தானா... அதுவும் கடன் வாங்கி கஷ்டப்பட்டு... எந்தப் பிள்ளை கவீகாரம் செய்ய இந்த அவதியெல்லாம்...?

இந்தக் கேள்வியை நான் கேட்கப் போனால் அது அபசாரமாக இருக்கும்.

அம்மா இருந்தவரை தன் தம்பிக்காரனை நினைத்து அவ்வப்போது அங்கலாய்த்துக் கொள்வாள். 'குருவி மாதிரி சேர்த்துச் சேர்த்தே பழகினவன்டா அவன். ஒம்பதை பத்தா, தொண்ணூறை நூறு ஆக்குவதிலேயே குறியா இருப்பான். அந்தப் பாவி தெய்வம், அவனுக்கு புத்திரபாக்கியம் தராமல் விட்டுட்டார். உன்னைத்தான்டா அவன் புள்ளையா நினைச்சிருக்கான். நீதான் கடைசி வரை அவனுக்கு ஆதரவா இருக்கணும்.'

"ஏம் பொன்னு, நான் பாட்டுக்குப் பேசிட்டிருக்கேன். நீ வாயே திறக்காம புள்ளையாராட்டம் உட்கார்ந்திருந்தா எப்படி...? நீ சரின்னு சொன்னா பெரியவர் கிட்டே இன்னைக்கே பேசி முடிச்சுடலாம்."

"சரி மாமா, நான் ஆச்சு!" என்று உற்சாகமாக பதில் சொல்ல எனக்கும் ஆசைதான். மாமாவுக்குக் கொடுத்தால் எங்கே போய்விடப் போகிறது. எல்லாம் வரவு கணக்கில்தான் சேரும், நிவனமாய்த் தந்து பாலாய்க் கரந்து கொள்கிற மாதிரி. ஆனால் தெம்பு வரவில்லை. காரணம் என் பொருளாதாரமும் தற்சமயம் க்ஷீண தசையில் இருக்கிறது. உத்தியோகம் பார்க்கிற மகாநகரத்தில் லட்சங்களைக் கொட்டி ஃப்ளாட் வாங்கி ஆறுமாதம் கூட ஆகவில்லை. அந்தத் தளர்ச்சி நீரவே இரண்டொரு வருஷம் ஆகும் போல தெரிகிறது. ஃப்ளாட்டுக்காக இருபது பவுனை தூக்கித் தந்த என் மனைவி கலோ, அதன் பிறகு முழுசாக சிரித்துப் பார்க்கவில்லை. இருபது பவுனை மீட்டுத் தந்து கலோ முகத்தில் மந்தகாசத்தை வரவழைப்பதுதான் இப்போது என் முக்கிய

விசாரம்.

உள்ளேயிருந்து அத்தை குரல் கொடுத்தாள். "பொன்னு, நீ வந்து குளிச்சு சாப்பிடப்பாரு... உங்க மாமாவுக்கென்ன இன்னைக்குப் பூரா வேணும்னாலும் இந்த ஒம்பது சென்டு, பத்து தென்னை புராணத்தையே பாடிகிட்டிருப்பாரு. வரவர அவரு தலையிலே பித்தம் ஏறிக்கிட்டு வருது...."

"இவ ஒருத்தி விவரம் புரியாதவ... ஆக்கி அரிச்சுப் போட்டுட்டா எல்லாமே நெறைஞ்சு போனதா நெனைப்பு இவளுக்கு... சரி சரி நீ உள்ளே போய் குளிச்சுட்டு வா பொன்னு."

"என்ன மாமா இது, ஊருக்கு வந்துமா பாத்ரூம் குளியல். நம்ம ஊர் ஆத்துலே முழுகி எழுந்து எத்தனை நாள் ஆச்சு. வாங்க மாமா ஆத்துக்கே போய் குளிக்கலாம்."

"ஆத்துலே எங்கே தண்ணி ஓடுது, பொன்னு? மணல்லேதான் புரண்டு வரணும். நாங்களே ஆத்துக் குளியலை மறந்து ரொம்பக் காலமாச்சு."

"இல்லையே நேத்து பஸ்லே வரும்போது பார்த்தேனே. ஆத்துலே ஜனநடமாட்டம் தென்பட்டுதே."

"அது சலவைக்காரங்களா இருக்கும் இல்லே ஊத்துத் தோண்டிக் குளிக்கிறவங்களா இருக்கும். கோவண அகலத்துக்கு அங்கே கொஞ்சம் இங்கே கொஞ்சமா ஓடிட்டிருக்கும். அதிலெல்லாம் உன்னாலே குளிக்க முடியாது."

"ஏதோ இருக்கிற தண்ணியிலே உடம்பை நனைச்ச ஆசையை தீர்த்துக்கறேனே..." என்று



## நெல்லை துணுக்ஸ்

**ஜோக் :**

**''என்ன இந்தச் சிலை மட்டும் உடைபடாம அப்படியே இருக்கு?''**

**''அதுவா இது வெள்ளைக்காரன் சிலை எந்தச் சாதின்னு தெரியலையாம்!''**



**நூதன திருட்டு!**

பஸ் நிலையங்களில் இப்போது ஒரு வகையான திருட்டு நடைபெறுகிறது. ஒரு டியூபில் மோசமான வகையில் வாசனை வரும் ஒரு பொருளை வைத்து யாருடைய முதுகு, தோள் முதலிய பாகங்களிலாவது அடித்து விட வேண்டியது. "சார் உங்க சட்டையில் ஏதோ அசிங்கமாக ஒட்டி இருக்கிறது" என்று சொல்ல வேண்டியது. அவர் அதனைக் கழுவ வேண்டித் தம் கையில் உள்ளதைக் கீழே அல்லது அருகில் வைக்கும் போது பொருள் அபேஸ்!

**இது எப்படி இருக்கு?**

ஒரு வீட்டின் சுவரில் வெள்ளை அடித்து, "இங்கே விளம்பரம் எழுதாதே!" என்று எழுதி வைத்தனர். மறுநாள் அந்தச் சுவரில், யாரோ, "சரி எழுதவில்லை போதுமா" என்று எழுதி வைத்திருந்தனர்.

**– எஸ். ஆர். ஸ்வாமி, திருநெல்வேலி – 11.**

**நூத்துக்கு ஒருத்தராவது....**

பாளை கதீட்ரல் பள்ளி அருகே, 'அலெக்ஸ் ஸ்டோர்ஸ்' என்ற கடை வைத்திருக்கும் அலெக்ஸ் ஒரு வித்தியாசமான மனிதர். அவர், கடையின் இரு கதவுகளிலும் "பீடி, சிகரெட் கிடையாது" என்று எழுதி வைத்துள்ளார். "நீங்கள் விற்காவிட்டால், ஒருவருமே புகைக்காமல் இருப்பார்களா என்ன?" என்று கேட்டால், "இதைப் பார்க்கிறவங்க எல்லாரும் மாறிடுவாங்கன்னு சொல்ல முடியாது. ஆனா நீங்க இதைப் பார்த்துட்டு எங்கிட்ட வந்து கேட்கிறீங்க. உங்க மனசுல ஒரு பாதிப்பை ஏற்படுத்தியதால்தானே இப்ப வந்து கேட்கீங்க. எப்படியும் பார்க்கிறவங்கள்லே நூத்துக்கு ஒருத்தராவது திருந்துவாங்கன்னு நினைக்கிறேன்" என்று நம்பிக்கையுடன் கூறுகிறார்.

**ஊர் சுற்றும் வாலிபன்!**

"மக்கள் என் பக்கம், உழைப்பாளி, (நெல்லை), மாவீரன்" – இவை திரைப்படப் பெயர்கள் மட்டும் அல்ல, நெல்லையில் ஓடும் சில தனியார் நகரப் பேருந்துகளின் பெயர்களும் கூட. இங்குள்ள ஒரு ஆட்டோவின் பெயர் 'ஊர் சுற்றும் வாலிபன்'.

**– லம்போதரன், கீழ்நத்தம்.**

**('நெல்லை துணுக்ஸ்' இந்த இதழுடன் நிறைவடைகின்றன. 'நெல்லைச் சீமை பயோடேட்டா' எழுதிய கே.ஜி.எஸ். கோவிந்தன் (கிருஷ்ணாபுரம்) சிறப்புப் பரிசாக ரூ. 100/- பெறுகிறார்.)**

நான் தொடர்ந்து வற்புறுத்த, மாமாவும் ஒப்புக் கொண்டார்.

மாமா கையில் சோப்பு டப்பா எடுத்துக் கொள்ள, அத்தை மரப் பெட்டிக்குள்ளிருந்து எடுத்துத் தந்த ஈரிழைத் துண்டை தோளில் போர்த்திக் கொண்டு ஆற்றுக்குக் கிளம்பினோம். அம்மன் கோயில் வளைவு திரும்பி கடைவீதி முனைக்கு வந்தபோது, பஸ் நிறுத்தத்துக்கு முன்னால் புதிதாய் உருவாகிக் கொண்டிருந்த அந்தக் கட்டடம் கண்ணில் பட்டது.

"ஏன் மாமா, இது சங்கரிப்பாட்டி வீடு இல்லையா? இது என்ன புதுசாய்க் கட்டடம்?"

"சங்கரிப்பாட்டி வீடேதான்... சரிதான், உனக்கு அந்தக் கதையெல்லாம் தெரியாதில்லையா... பாட்டி கண்ணை மூடி ஒரு வருஷத்துக்கு மேலேயே ஆச்சு. ஆவி பிரிஞ்சு ஒரு முழுப்பகல் முடிஞ்ச பின்னேதான் விஷயம் வெளியே தெரிஞ்சது. அப்புறம் நடுஜாமத்துக்கு மேலே ஊர்க்காரங்க சேர்ந்து எடுத்துப்போய் ஆத்து மேட்டுலே அடக்கம் பண்ணினோம். உனக்குத்தான் தெரியுமே, கிழவி யாரோடவும் அண்டாமல், அடுக்காமல் புதையல் காக்கிற பூதம் மாதிரி இந்த வீட்டுக்குள்ளே ஒண்டியா வாழ்ந்த கதை."

மாமா சொன்னது சரிதான். புதையல் காக்கிற பூதம் மாதிரி ஒரு அமானுட பின்னணியில் தான் சங்கரிப்பாட்டி வாழ்ந்து வந்தாள். மிலிட்டரியில் இருந்த பாட்டியின் கணவர் இளம் வயதிலேயே யுத்தத்துக்கு பலியாகிப் போனாராம். புருஷனின் மரண அறிவிப்பைச் சுமந்து வந்த சிருடை பார்சலை பார்த்ததிலிருந்து பாட்




# நெல்லை பெனிபிட் பண்ட் லிமிடெட்

26, ரங்கநாதன் தெரு, முதல் மாடி, தி.நகர், சென்னை-17.
4345178

## பரிசு! பரிசு! பரிசு!
## 14 கிராம் தங்க செயின்

1. பிக்சட் டெபாசிட் 21% + 3% போனஸ்
2. பென்ஷனர் டெபாசிட் 22% + 3% போனஸ்
3. கல்வி உதவி டெபாசிட் 24% + 3% போனஸ்

4. கரேகா டெபாசிட் :

| செலுத்தும் தொகை ஒரு தரம் மட்டும் | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|
| ரூ. 1000 | 23 வருடம் | ரூ. 1,00,000 |

5. பிறந்த நாள் டெபாசிட் :



| செலுத்தும் தொகை ஒரு முறை மட்டும் | வருடம் தோறும் பிறந்த நாள் அன்று | திருமணத்தின் போது கிடைக்கும் தொகை |
|---|---|---|
| ரூ. 4250 | ரூ. 1000 | ரூ. 5000 |

6. வாரிசுதாரர் டெபாசிட் :

| ஒருமுறை செலுத்தும் டெபாசிட் | காலம் | மாதாமாதம் பெறும் தொகை |
|---|---|---|
| ரூ. 10,000 | 180 மாதம் | ரூ. 7,500 |
| | 300 மாதம் | ரூ. 15,000 |

*வீடு நிலம் தங்க நகைபேரில் கடன் வழங்கப்படும்*

# வட இந்திய சுற்றுலா

| | செல்லும் கிழமைகள் | கட்டணம் |
|---|---|---|
| 1. டெல்லி-பத்ரிநாத்-கேதார்நாத்-கங்கோத்ரி-யமுனோத்ரி-டெல்லி | ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் | ரூ. 2,000/-* |
| 2. டெல்லி-பத்ரிநாத்-கேதார்நாத்-டெல்லி | ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் | ரூ. 1,200/-* |
| 3. டெல்லி-அலகாபாத்-வாரணாசி-கயா-அயோத்தியா-ரிஷிகேஷ்-டெல்லி | ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் | ரூ. 1,600/- |
| 4. டெல்லி-சிம்லா-குலு-மனாலி-சண்டிகர்-டெல்லி | ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் | ரூ. 1,600/- |
| 5. டெல்லி-ஆக்ரா-ஜெய்ப்பூர்-டெல்லி | திங்கள் / வெள்ளி | ரூ. 425/- |
| 6. டெல்லி-முசௌரி-ஹரித்துவார்-ரிஷிகேஷ்-டெல்லி | செவ்வாய் / வெள்ளி | ரூ. 350/- |

* ஹாலில் தங்கும் வசதி, பஸ் மற்றும் கைடு வசதிகள் சேர்ந்த கட்டணம்.
ஐயப்பன் கோவிலுக்கு சென்று வர எங்களது எல்லா கிளைகளிலிருந்தும் சூப்பர் டீலக்ஸ் பஸ்கள் கான்ட்ராக்ட் முறையில் கிடைக்கின்றன.

சென்னை : 585253 / 564864; ஹைதராபாத் : 227233; பெங்களூர் : 2262633;
விசாகப்பட்டினம் : 545565; விஜயவாடா : 62227; டெல்லியில் ஹோட்டல் சதர்னில் தங்குங்கள்.

முக்கியமான இடத்தில் நவீன வசதிகளுடன் ஏசி, மற்றும் நான்-ஏசி ரூம்கள்; குழுக்களாக வருபவர்களுக்கு தங்குவதற்கு ஹால்கள்; டெல்லியிலே சிறந்த தென்னிந்திய சாப்பாடு கிடைக்குமிடம் கப்ரபாத் ரெஸ்டாரண்ட். பிராமண சமையல்காரர்கள். STD / FAX வசதி ஏசி டைனிங் ஹால். டெல்லி ரயில்வே ஸ்டேஷனிலிருந்து இலவசமாக அழைத்துச் சென்று திரும்பக் கொண்டு வந்து விடுகிறோம். கப்ரபாத்தின் நடமாடும் உணவகம் பத்ரி, கேதார், கங்கோத்ரி மற்றும் யமுனோத்ரியில் சுவைமிக்க சைவ உணவை உங்களுக்கு அளிக்கிறது.

## சதர்ன் டிராவல்ஸ் / ஹோட்டல் சதர்ன்

*இந்திய அரசு சுற்றுலாத்துறை, டெல்லி அவர்களின் அங்கீகாரம் பெற்றது.*

18/2, Arya Samaj Road, W.E.A. Karol Bagh,
New Delhi - 110 005.
Tel : 5739508 / 5722210 / 5724085.

Hotel Howrah Complex Basement, Poonamallee High Road,
Opp. Central Suburban Railway Station, Madras - 600 003.
Tel : 585253 / 564864.

INSPIRATION/ST/1053

# KALKI SHOPPING PAGE

# அவசர பந்தன மகா ஜெயாபிஷேகம்!

திருநாகேஸ்வரம் நாகநாதசுவாமி கோவில் கும்பாபிஷேகம், ஜெ.வுக்காக அவசர அவசரமாக, அரைகுறையாக நடத்தி முடிக்கப்பட்டது தெரியும். உள்ளூர் மக்கள், கோவில் அதிகாரிகளின் அதிருப்தி ஒருபுறம் இருக்க, இன்னொரு விஷயம் ஒட்டு மொத்தமாக முகம் சுளிக்க வைத்து விட்டது!

திருப்பணி செலவுகளுக்காக ரூபாய் முப்பது லட்சம் எஸ்டிமேட் போடப்பட்டு, அதில், அரசின் பங்காகப் பதினொரு லட்சம் அளிப்பதாக அறிவிக்கப்பட்டது. (அரைகுறையாகவாவது) திருப்பணிகள் முடிந்து, கும்பாபிஷேகமும் நடந்தேறிவிட்டது. இன்னும் அரசு ஐந்து பைசா கூடத் தரவில்லையாம்!

கும்பாபிஷேகத்தை ஒட்டி ஏற்பாடு செய்யப்பட்ட குன்னக்குடி வைத்யநாதனின் வயலின் கச்சேரிக்குக் கூட பணம் தர முடியாமல், இறுதியில் ஒரு குடத்தைத் தொழிலதிபர் தயவில்தான் செட்டில் செய்யப்பட்டிருக்கிறது.

ஜெ.வின் ராகு தோஷம் நீங்குவதற்காக நடத்தப்பட்ட கும்பாபிஷேகம் இது. கோவிலின் ராகுபகவான் சந்நிதிக்கு எந்த முக்கியத்துவமும் அளித்து, புதுப்பிக்கப்பட்டதாகத் தெரியவில்லை. கோபுரங்களுக்குப் போடப்பட்ட சாரம் கூட பிரிக்கப்படாத நிலையில் ஒரு கும்பாபிஷேகமா? ஆச்சரியத்தோடு கவலைப் படுகிறார்கள்.



• கோபுர சாரம் பிரிக்கும் முன்னரே முடிந்துவிட்ட கும்பாபிஷேகம்!

**திருநாகேஸ்வரத்திலிருந்து : எஸ். சந்திரமௌலி**

---

டிக்கு சித்தம் பேதலித்துப் போனதாக என் சின்ன வயதில் சொல்லக் கேட்டிருக்கிறேன்.

குழந்தைகுட்டிகள் இல்லாத பாட்டிக்கு சொந்த பந்தம் என்று சிலபேர் இருந்தார்கள். ஆனால் யாரோடும் உறவோ, ஒட்டுதலோ வைத்துக் கொள்ளாமல் உலகத்தோடு பிணக்கம் கொண்டவள் மாதிரி, தன் அடைபட்ட வீட்டுக்குள்ளே தனி ஜீவனாகவே காலம் தள்ளினாள் பாட்டி. மாதமொருமுறை பென்ஷன் பணம் வாங்கி வர வாசல் படலை மூடிவிட்டு வெளியே போவது தவிர, வீட்டுக்கு வெளியே பாட்டியின் நடமாட்டம் தென்பட்டதில்லை.

வேலித் தடுப்புக்குள்ளே செடியும் கொடியுமாய் புதர் மூடிய வீட்டுக்குள்ளிருந்து புலம்பல் சத்தம் மட்டும் ஓயாமல் ஒலித்துக் கொண்டிருக்கும். அருவமான யாரையோ நோக்கிக் குரலெடுத்து அரற்றிக் கொண்டிருப்பாள். ஒரு சமயம் ஒப்பாரி, மறுசமயம் வசவு, பிறகு சாபமிடல். சிவந்து மெலிந்த பாட்டியின் உருவம் என் பார்வையில் பட்ட இரண்டொரு சந்தர்ப்பங்களில் நான் அந்த முகத்தில் பார்த்தது கோபமோ, சோகமோ வெறுப்போ அல்ல. மாறாக எல்லா உணர்ச்சிகளும் வெந்து தணிந்து போன மாதிரி ஒரு வெறுமை மட்டுமே.

"ஏன் மாமா, பாட்டி கைவசம் நிறைய காசு பணமெல்லாம் இருந்ததா பேசிக்குவாங்களே... அதெல்லாம் யாருக்குப் போய் சேர்ந்தது?" மடித்துக் கட்டிய வேட்டியும் மேல்துண்டு முண்டாசுமாக எனக்கு முன்னால் நடந்து கொண்டிருந்த மாமாவிடம் கேட்டேன்.

"அந்த வேடிக்கையை ஏன் கேக்கறே... அது ஒரு தனி கதை. கிழவி சொத்திலே அவ சொந்தக்காரங்க சில பேருக்கெல்லாம் ஒரு கண் இருந்தது. ஆனால் கிழவி ஒரு காரியம் செஞ்சிருந்தது பாரு, அதுதான் அபாரம்...! சாவுச் சேதி தெரிஞ்ச உடனே நம்ம ஹைஸ்கூல் ஹெட்மாஸ்டர் விஸ்வநாதய்யர் இல்லே, அவரு இங்கே வந்தாரு. நம்ம ஜாதி ஜனங்கள் சில பேரை கூப்பிட்டுப் பேசி, அவங்க கையிலே ஒரு தொகையைத் தூக்கித் தந்தாரு. பாட்டி தன் ஈமச் செலவுகளுக்காக அவர் வசம் கொடுத்து வைச்சிருந்த பணமாம்.

"பத்து வருஷமாகறது இந்த பணம் என் கைக்கு வந்து. அதுக்கான வட்டியும் சேர்த்துத் தந்திருக்கேன். பாட்டி காரியங்களை எந்தக் குறையும் வைக்காமல் உங்க வழக்கப்படி பேஷா நடத்தி முடியுங்க'ன்னாரு. அது மட்டுமில்லை கிழவி எழுதி வைச்சுட்டுப் போயிருந்த உயிலையும் எடுத்து, ஐயரே எல்லோருக்கும் படிச்சுக்காட்டினாரு. அதன்படி தன் கழுத்து, காதில் இருக்கும் நகைகளை பொள்ளாச்சியிலுள்ள தன் புருஷன் வழி தங்கை மகளுக்குக் கொடுக்கச் சொல்லியிருந்தாள். வீடு, இடம், அப்புறம் ரொக்கப்பணம் இதெல்லாம் நம்ம ஊர் அம்மன் கோவிலுக்குச் சேர வேணும்னும் எழுதி வைச்சிருந்தாள். எப்படியோ இந்த கிறுக்கு கிழவி புண்ணியத்திலே நம்ம அம்மன் கோயிலுக்கு அதிர்ஷ்டம் அடிச்சது. அதான், வீட்டை இடிச்சு அந்த இடத்திலே புதுசா மண்டபம் கட்டிக்கிட்டிருக்காங்க; கல்யாணம் காது குத்துன்னு ஊர்ஜனங்களுக்கு உபயோகமா.... மண்டபத்துக்குப் பேரு கூட சங்கரிப்பாட்டியோடதுதான்."

பாட்டியின் அந்திமப் படலம் மனதைத் தொட்டது. மலைப்பு ஊட்டியது. பித்துப் பிடித்த மாதிரி வெளியுலகத்துக்குக் காட்சி தந்த பாட்டி எவ்வளவு விவேகமாய்ச் செயல் பட்டிருக்கிறாள். தன் ஈமச் செலவுகளுக்குக் கூட 'அச்சாரம் தந்து வைத்திருந்த அந்த முன் யோசனை, தன் உடைமைகளை ஊருக்கு உப யோகமாய் விட்டுப் போயிருக்கிற அந்தப் பெருந்தனம், தன் எண்ணங்களைச் செயல்படுத் தும் பொறுப்பை நம்பகமான ஒருவர் கையில் ஒப்புவித்த அந்த மதியூகம்.... பூதம் மாதிரி வாழ்ந்த பாட்டி தெய்வம் மாதிரியல்லவா இறந் திருக்கிறாள்!

ஆற்று மேட்டை அடைந்து ஆலமரப் படித்துறை வழியாக இறங்கினோம். கண்ணுக்கு முன்னால் மெத்தை விரித்த மாதிரி தெரிந்த மணல் பரப்பு. வண்ண வண்ண பாத்தி வரிசை களாய் சலவை செய்து மணல் படுகையில் உலர்த்தப் போட்ட புடைவை, வேட்டி வகையறாக்கள். ஒரு காலத்தில் தன் மடியெல்லாம் நீர் புரள, கரை தழுவி ஓடிக் கொண்டிருந்த ஜீவநதி இது.

அந்த நாளில் அம்மாவின் கையைப் பிடித்த படி ஆற்றோட்டத்தின் இழுப்பில் காலுக்கடி யில் மணல் கரைய, மீன் குஞ்சுகள் விரலைக் கொஞ்சலாகக் கொரிக்க, முழுகி முழுகிக் குளித்த காட்சி நினைவுக்கு வருகிறது.

இப்போது, மேற்கே உருவான அணைக் கட்டுக்குத் தன் சாரத்தையெல்லாம் தந்து விட்டு சக்கையாகக் காட்சி தருகிறது ஆறு, ஒரு வாழ்ந்து கெட்ட வீடு போல.

"பாத்தியா பொன்னு, ஆத்தோட கோலத்தை! என்ன முழிக்கிறே, இதுலே எப்படி குளிக்கிறதுன்னா...." மாமா நக்கலடித்தார்.

மாமா பேசியது காதில் விழ தார்ப்பாய்ச்சிக் கோவணத்தோடு முதுகைக் காட்டியபடி மணல் பரப்பில் உட்கார்ந்திருந்த உள்ளூர் சலவைக்காரர் திரும்பிப் பார்த்தார். "என்ன சாமி, ஆத்துப்பக்கம் அபூர்வமா?" என்று கேட்டார்.

"அடடே, சாமிக்கண்ணுவா... தங்கச்சி மகன், பம்பாயிலிருந்து வந்திருக்கான். சொன்னா கேட்கலை, நம்ம ஊர் ஆத்துலே குளிக்கணும்னு பிரியப்பட்டான்... ஆனால் தண்ணியே தென்படலையே..."

"கண்ணுக்குத் தெரியாததெல்லாம் இல்லவே இல்லைன்னு ஆயிடுங்களா?" என்று சொல்லிவிட்டு வெற்றிலைக் காவி தெரிய ஒரு வேதாந்த சிரிப்பு சிரித்தார் சாமிக்கண்ணு. பிறகு, பக்கத்தில் வைத்திருந்த மண்வெட்டியைத் தூக்கிக் கொண்டு, "வாங்க என் கூட" என்றபடி முன்னே நடக்க -

மறுகரை ஓரமாய் பாறாங்கல் வரிசைக்கு மறைவில் தன் வறட்சிக் கோலத்துக்காக நாணிய மாதிரி கையகலத்துக்கு ஓடிக் கொண்டிருந்தது நீர்.

சாமிக்கண்ணு குனிந்து கையிலிருந்த மண் வெட்டியால் நீளவாக்கில் இடம் வலமாய் மணலைத் தோண்டத் தோண்ட முதலில் சன்னமாய்க் கசிந்து, அப்புறம் தாரையாகி வழிந்து ஊற்றுக்கண் திறந்து தேக்கம் கட்டுகிற நீரோட்டத்தைப் பார்க்கிற போது... அடேயப்பா இந்த வறட்சியிலும் கூட இப்படி ஒரு வள்ளல் தனமா....

"பார்த்தீங்களா ஆறு நமக்காக நெஞ்சுக் குழிக்குள் நீர் சேர்த்து வைத்திருக்கிற வித்தையை!" என்று மீண்டும் ஒரு சித்தர் சிரிப்பு. சாமிக்கண்ணு முழங்காலுக்கு மேல் நீர் தேங்க "போதுங்களா" என்று கேட்டபடி நிமிர்ந்தார்.

"போதும் போதும் யதேஷ்டம்" என்றார் மாமா.

முதலில் கலங்கலாகத் தெரிந்த நீர் சற்றைக் கெல்லாம் படிந்து தெளிய குப்புறக் கவிழ்ந்து உடம்பு குளிர முழுகி முழுகி எழுகிற போது ஏதோ புண்ணிய தீர்த்தத்தில் நீராடுகிற சுகம்.

குளித்து முடித்து ஈரவேட்டியோடு அரச மரத்தடி பிள்ளையாரப்பனுக்குக் கும்பிடு போட்டு வீடு திரும்புகிற வழியில் மாமா என் தோளைப் பிடித்தபடி சொன்னார்.

"பொன்னு நான் சொல்றதைக் கேட்டுக்கோ. எனக்கும் வயசு ஏறிக்கிட்டு வருது. நல்ல காரியங்களை நாள் கடத்தாமல் செய்யணும்பாங்க. இந்த அறுவடை முடிஞ்ச உடனே பக்கத்து வீட்டுப் பெரியவர் கிட்டே பேசி விவகாரத்தை முடிச்சுடுவேன். கிரயம் பண்ணுகிற போது என் பேரில் இருக்கிற பழைய சொத்துக்களையும் சேர்த்து ஒட்டு மொத்தமா உன் பேருக்குப் பதிவு பண்ணி முடிச்சுடலாம். தபால் போடுவேன், தவறாமல் வந்துடு."

நான் தவித்துப் போனேன். பேச்சு வர வில்லை. இப்படியும் ஒரு பெரும்போக்கா! வருந்தி வருந்திச் சேர்ப்பது, அப்புறம், 'இந்தா வைத்துக் கொள்' என்று வாரித் தந்து விடுகிற இந்த வள்ளல் தனம்... சொந்த வீடு, பெண்டாட்டிக்கு நகை என்று குறுகலாய் வட்டம் போட்டு வாழ்ந்து கொண்டிருக்கிற என் போன்றவர்களுக்கு இந்த அருங் குணமெல்லாம் வரப் போவதில்லை. இதற்கு ஒரு மன விசாலம் வேண்டும், சங்கரிப்பாட்டி மாதிரி, இந்த மாமா மாதிரி, நெஞ்சுக்குழிக்குள் சேர்த்து வைத்த நீரை ஊற்றுக்கண் திறந்து சுரக்கிற இந்த ஊர் ஆறு மாதிரி....

மனசு ஒரு முடிவுக்கு வந்திருந்தது. சுவோ. வுக்கு இருபது பவுனை மீட்டுத் தருகிற திட்டத் தைக் கொஞ்ச காலத்துக்குத் தள்ளிப் போட்டு விட்டேன்.

பாண்டிச்சேரி, பிரெஞ்சு ஆட்சியிலிருந்து விடுபட்டு இந்தியாவுடன் இணைந்த ஆரம்ப வருடங்களான 1954–59. இந்திய அரசின் விதிமுறைகளுக்கும் சட்டதிட்டங்களுக்கும் கட்டுப்பட்டு, ஏற்றுமதி இறக்குமதி செய்வது பாண்டிச்சேரியில் அதுவரை ஈடுபட்டிருந்த வணிகர்களுக்குப் புதிய அனுபவமாக இருந்தது. இச் சூழ்நிலையில் அரசு அதிகாரிகளில் பலர் ஊழல் புரிய ஆரம்பித்தார்கள். சி.பி.ஐயின் பார்வையும் விசாரணையும் பாண்டிச்சேரியில் அதிகரித்தன.



பாண்டிச்சேரி கேஸ்கள் பற்றி ஏற்கெனவே ஓரிரண்டு சொல்லியிருக்கிறேன். இந்த வாரம் மற்றொன்று.

ஏற்றுமதி – இறக்குமதி கட்டுப்பாட்டுத் துறையில் ஓர் உயர் அதிகாரி. பெயர் சிவராமன். பாண்டியில் அவருக்குப் பணி என்றாலும் குடும்பத்தைச் சென்னையில்தான் விட்டிருந்தார். ஸ்டெர்லிங் ரோடில் வாசம்.

இந்த சிவராமனைப் பற்றி நல்ல ரிப்போர்ட்டுகள் எப்போதும் இருந்ததில்லை. சி.பி.ஐக்கு வந்த புகாரில் கூட, நிறைய ஊழல் செய்பவர், கணக்கு வழக்கின்றி லஞ்சத்தில் திளைப்பவர், ஏற்றுமதி ஆர்டர்கள் தருவதில் கமிஷன் நிறைய பெறுபவர் என்றெல்லாம் குறிப்பிட்டிருந்தது.

'சமீபத்தில் சிவராமன் ஒரு புதிய ஃபியட் கார் வாங்கியிருக்கிறார். சென்னையில் – ஸ்டெர்லிங் ரோடில் வசிக்கும் அவரது குடும்பத்தினர் உபயோகித்துக் கொண்டிருக்கும் அந்தக் கார் கூட அவர் பணம் செலுத்தி வாங்கியதில்லை. யாரோ லஞ்சமாக வாங்கித் தந்ததுதான்...'

– இப்படி நீண்டிருந்த அந்தப் புகார் அநாமதேயமாக இருந்தபோதிலும், சிவராமன் நேர்மையற்றவர் என்று பொதுவாக எல்லோராலும் பேசப்பட்டதால், புகாரைத் தீர விசாரிக்க முடிவு செய்தேன். (அப்போது நான் சி.பி.ஐயின் சென்னைப் பிரிவு எஸ்.பி.)

என் ஜூனியர் ஆபீசரை அனுப்பி, அந்தக் கார் – உபயோகிப்பவர்களை கவனிக்கச் செய்தேன். சிவராமனின் மனைவி, கடைக்குச் செல்வது, உறவினர் – நண்பர்களைச் சந்திக்கச் செல்வது போன்றவற்றுக்குத்தான் அந்தக் காரைப் பயன்படுத்திக் கொண்டிருந்தார். முதல் கட்டப் பணி முடிந்தது.

அடுத்தபடியாக, அந்தக் காரின் நம்பரை ஆர்.டி.ஓ. அலுவலகத்தில் கொடுத்து, அது யார் பேரில் ரிஜிஸ்தர் ஆகி இருக்கிறது என்று பார்த்தோம்.

ஆச்சர்யம் – சிவராமன் பேரில் இல்லை! மாறாக கேசவன் என்கிற பெயரும் கேரளாவில் ஒரு கிராமத்து முகவரியும் தரப்பட்டிருந்தது.

குழப்பமாக இருந்தது. எங்கோ இருக்கும் யாரோ ஒருவனின் பெயரில் பதிவாகி இருக்கும் காரை இந்த சிவராமனின் மனைவி ஒரு வருடத்திற்கு மேலாக எப்படி உபயோகித்துக் கொண்டிருக்க முடியும்? (ஒரு வருடத்திற்கு மேல் அவள்தான் அதை உபயோகித்து வந்திருக்கிறாள் என்பதற்கு, அந்தக் காருக்கு வழக்கமாக பெட்ரோல் போடப்படும் பங்கின் கணக்குப் புத்தகங்கள் சாட்சி.)

சரி, யார் இந்த கேசவன் என்று பார்த்து விடுவது என்று அந்தக் கேரள முகவரிக்கு ஒரு ஆபீசரை அனுப்பினேன்.

தேடிப் பிடித்ததில், கேசவன், சிவராமனின் பெரியப்பா என்று தெரிந்தது. ஆனால் ஒரு கார் வாங்கி, தம்பி மகனின் மனைவி உபயோகத்துக்கு அன்பளிப்பாகத் தரும் அளவுக்குப் பணக்

# ஓர் அரசு ஊழியரும் பியட் கார் லஞ்சமும்!

**சி. வி. நரசிம்மன்**

காரப் பெரியப்பா இல்லை. பரம ஏழை. தவிர, மிகவும் வயதானவராகவும் நோய்வாய்ப் பட்டவராகவும் இருந்தார்.

"நான் எங்கங்க கார் வாங்கறது? சாப்பாட்டுக்கே கஷ்டம். கொஞ்ச நாள் முன்னால் சிவராமன் வந்து கேட்டான். 'உன் பேர்ல ஒரு கார் ரிஜிஸ்தர் பண்ணி, வாங்கிக்கறேன் பெரியப்பா'ன்னான். சரின்னேன். அவ்வளவுதான் தெரியும்!" என்றார் அந்தப் பெரியப்பா.

சரியப்பா என்று அவரிடம் விடைபெற்று, நேரே பாண்டிச்சேரி பயணம்.

'நீ உபயோகித்துக் கொண்டிருக்கும் காரை ஏன் உன் பெரியப்பா பெயரில் ரிஜிஸ்தர் செய்தாய்?'

– இதுதான் அந்த சிவராமனிடம் நாங்கள் கேட்ட கேள்வி.

"நல்ல கேள்வியாய் இருக்கிறதே? இதென்ன பெரிய விஷயம்! என் கைக்காசைப் போட்டு, நான் வாங்கிய காரை என் இஷ்டம் போல் யார் பேரில் வேண்டுமானாலும் பதிவு செய்யக் கூடாதா என்ன? தவிர, என் பெயரில் வாங்குவதென்றால் மேலதிகாரிகளுக்கு எழுதி, அனுமதி வாங்கி, மேலும் பல நிர்வாக முட்டுக் கட்டைகளைச் சந்திக்க வேண்டிவருமல்லவா? அதனால்தான் என் பாசத்துக்குரிய பெரியப்பா பேரில் ரிஜிஸ்தர் செய்தேன்."

– இது சிவராமன் சொன்ன பதில். குழப்பங்களற்ற, நேரிடையான விளக்கம்தான். ஆனாலும் எனக்கு விட்டு விட மனம் இல்லை.

வண்டியை டி.வி.எஸ். கம்பெனியின் திருச்சி கிளையிலிருந்து வாங்கியதாகவும் சிவராமன் சொன்னார். டி.வி.எஸ். கம்பெனியின் ரிகார்டுகளிலிருந்து ஏதாவது தடயம் கிடைக்குமா என்று தெரிந்து வர திருச்சிக்கு ஆள் அனுப்பினேன்.

இங்கு ஒரு விஷயத்தை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். சிவராமன் கார் வாங்கிய நான்கு வருடங்கள் கழித்துத்தான் இந்த கேஸ் சி.பி.ஐ.க்கு வந்தது. ஆகவே, டி.வி.எஸ்ஸின் திருச்சி கிளையில் குறிப்பிட்ட பிரிவைச் சேர்ந்த கிளார்க்குக்கு, அந்தக் கார் வாங்கப் பட்ட தேதி, செலுத்தப்பட்ட தொகை விவரங்கள் அடங்கிய பழைய பில் புத்தகத்தைத் தேடி எடுப்பதில் சற்று சிரமம் இருந்தது.

ஒருவழியாகத் தேடி எடுத்துப் பார்த்ததில், கேசவன் பெயரில்தான் பில் போடப்பட்டிருந்தது. முதல் தவணையாக ரூபாய் ஐயாயிரமும், இரண்டாம் தவணையாக ரூபாய் மூவாயிரத்தி முந்நூற்றுப் பதினான்கும் (3,314) ரொக்கமாகச் செலுத்தப்பட்டிருந்தன. (அன்றைக்கு (1950 களில்) ஒரு புது பியட் காரின் விலையே எட்டாயிரத்து சொச்சம்தான்!)

இரண்டு தவணைகளிலும் பணம் செக் மூலமாக அல்லாமல், ரொக்கமாகவே கொடுக்கப்பட்டதால், பணத்தை யார் கொடுத்தார்கள் என்பதற்கு ரிகார்டில் சாட்சியம் இல்லாமல் போய் விட்டது. இந்த பில்களின் பணம் செலுத்தப்பட்டு நான்கு ஆண்டுகளுக்கு மேல் கடந்து விட்டதால், பணம் கட்டிய ஆள் யார் என்பதை டி.வி.எஸ். கிளார்க்கால் சொல்ல முடியவில்லை. மேலும் தடயம் ஒன்றுமில்லாமல் எங்கள் புலனாய்வு அப்படியே நின்றுவிட்டது.

சிவராமன் பணம் செலுத்தி, தன் பெரியப்பா பெயரில் கார் வாங்கி இருக்கிறார். சிம்பிள்! சிவராமன்தான் பணம் செலுத்தினாரா என்பதுதான் நமக்குத் தெரிய வேண்டியது. வேறு யாரும் செலுத்தியதற்கான ஆதாரம் இல்லாததால், சிவராமன் சொன்னதை அப்படியே ஏற்றுக் கொள்வதைத் தவிர, வேறு வழி இல்லாத நிலை!

அப்போதும் விசாரணையை முடிக்க எனக்கு மனசில்லை. அந்தக் கார் வாங்கப்பட்ட தினத்தில் வேறென்னென்ன வாங்கப்பட்டிருக்கின்றன என்பதை அறிய, அந்த பில் புத்தகத்தை சும்மா புரட்டிக் கொண்டிருந்ததில்,

சிவராமன் இரண்டாவது தவணை ரூ. 3,314 செலுத்தியதற்கான பில்லுக்கு அடுத்த பில்லில் ரூ. 213க்கு ஏதோ ஸ்பேர் பார்ட்ஸ் வாங்கப் பட்டிருப்பது தெரிந்தது. வேறு யாரோ ஆள். அதிலும் சுவாரஸ்யமில்லை.

அந்த பில்லையும் புரட்ட, சட்டென்று, அந்த பில்லின் பின்பக்கத்தில் ஒரு மூலையில்

# இதுவல்லவோ நட்பு...!

கலைஞருக்கு 'தமிழின்' மீது நட்பு!
இது 'காரியார்த்த' நட்பு!



கோபால்சாமிக்கு 'புலிகள்' மீது நட்பு!
இது 'புளியைக்கரைக்கிற புரியாத' நட்பு!

ஜெ.க்கு 'ஆருயிர்த்தோழி' மீது நட்பு!
இது 'தேவையில்லா' நட்பு!

ஆருயிர்த் தோழிக்குத் 'தமிழ் நாடு மீதே' நட்பு!
இது 'விசாலமான' நட்பு!

சுப்பிரமணிய சாமிக்கு 'சந்திராசாமி மீது' நட்பு!
இது 'கூடா' நட்பு!

வீரப்பனுக்கு 'காஸட்' மீது நட்பு!
இது 'காஸ்ட்லி' நட்பு!

நரசிம்மராவுக்கு 'அ.தி.மு.க.' மீது நட்பு!
இது 'புன்னகைக்காத' நட்பு!

ஆதிராஜாராமுக்கு 'நெஞ்சு வலி' மீது நட்பு!
இது 'போலி' நட்பு!

ரஜினிக்கு 'காங்கிரஸ்' மீது நட்பு!
இது 'ஆழம்பார்க்கும்' நட்பு!

சரத்குமாருக்கு 'ரஜினி' மீது நட்பு!
இது 'உருப்படியான' நட்பு!



ஆளும் கட்சிக்கு 'வன்முறை' மீது நட்பு!
இது 'மங்களம் பாடும்' நட்பு!

அமீருக்கு 'ஹவாலா மோசடி' மீது நட்பு!
இது 'அடங்காத பேராசை' நட்பு!

அடியேனுக்கு 'கல்கி' மீது நட்பு!
இது 'கண்ணியமான' நட்பு!

நட்புடன் : **கே.ஜி.எஸ். கோவிந்தன்.**

இரண்டு எண்கள் பென்சிலால் எழுதப் பட்டிருந்தன. இப்படி :

*3527.00*

*473.00*

திடீரென்று எனக்கு மண்டையில் மின்னல் அடித்தது! இந்த முதல் நம்பர் 3,527 என்பது நமது சிவராமனின் இரண்டாவது தவணைத் தொகையான 3,314 மற்றும் அந்த ஸ்பேர் பார்ட்ஸ் பில்லின் தொகையான 213ன் கூட்டுத் தொகை (3,314+213 - 3,527.)

பின், அதென்ன 473? அதைத் தெரிந்து கொள்ள அந்த டி.வி.எஸ். கிளார்க்கிடம் இந்த எண்களைக் காட்டியவுடன், அவர் முகம் பிரகாசித்தது.

"ஞாபகம் வந்துடுத்து சார்! ரெண்டு பில்லையும் ஒரே ஆள்தான் கிளியர் பண்ணினார். நாலாயிரம் கேஷ் கொடுத்தார். ஒரு பில் ரூ. 3,314 அடுத்தது ரூ. 213. மொத்தம் 3,527 ரூபா. நாலாயிரத்துல மீதி 473 ரூபா தரணும். அதைத்தான் அங்கே எழுதி, கழிச்சி, சரிபார்த்திருக்கேன்!"

இந்த கூட்டல் - கழித்தல் குறிப்பினால் எங்களுக்கு உடனே தடயம் கிடைத்து விட்டது.

அந்த 213 ரூபாய்க்கு ஸ்பேர் பார்ட்ஸ் வாங்கிய ஆசாமி சென்னையில் இருக்கும் வியாபாரி - பெயர் முகமது அன்சாரி என்று அந்த பில்லில் குறிப்பிட்டிருந்தது. அவர் விலாசமும் இருந்தது.

உடனே அந்த ஆளை மடக்கி விசாரிக்க ஆரம்பித்ததும், மளமளவென்று உண்மைகளைச் சொல்லி விட்டார்.

'கேசவன்' என்று சிவராமன் குறிப்பிடச் சொன்ன பெயரில் கார் பதிவு செய்து, வாங்கியதும், அதற்கு இரண்டு தவணைகளில் பணம் செலுத்தியதும் இந்த அன்சாரிதான். ஏற்றுமதி லைசென்ஸ் வழங்குவதில் சில சலுகைகள் காட்டியதற்காக, சிவராமனுக்கு அளித்த 'அன்புப் பரிசு' அது!

மிக சாமர்த்தியமாகப் பெயர், இட விவரங்களை மறைத்து லஞ்சம் வாங்கிய சிவராமனின் செயல் வெளிச்சத்துக்கு வந்தது!

அவர் மீது கோர்ட்டில் குற்றப் பத்திரிகை தாக்கல் செய்தோம். கீழ்க் கோர்ட்டிலிருந்து, சுப்ரீம் கோர்ட் வரை சென்ற சிவராமனின் வாதங்கள் எடுபடவில்லை. குற்றம் நிரூபிக்கப் பட்டு, தண்டனையும் பெற்றார்.

ஜூலை 1962-ல் வெளியான 'இந்தியன் போலீஸ் ஜர்னலி'ல் - இந்தக் கேஸின் முழு விவரமும் வெளியானது. அந்த வருடம் துப்பறியப்பட்ட கேஸ்களிலேயே மிகச் சிறந்த கேஸ் என்று பாராட்டப்பட்டது!

(அடுத்த வாரம்)

